# குலப்பெருமை




கே. எம். முன்ஷி

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்




தியாகராயநகரம் :: சென்னை—17

# சிறப்புரை

## அறிஞர் வெ. சாமிநாத சர்மா

பழுத்த அரசியல் வாதியும், நிருவாகத் திறமை மிக்கவருமான ஸ்ரீ கே. எம். முன்ஷி, ஒரு சிறந்த இலக்கிய கர்த்தர் என்பதைப் பலரும் அறிவர். குஜராத்தி மொழியிலுள்ள அவரது இலக்கியப் படைப்புக்கள் பல, அமர முத்திரை பெற்று விளங்குகின்றன. அவர் எழுதியுள்ள சிறு கதைகளிற் சில, தமிழுடை அணிந்து இந்நூலில் காட்சியளிக்கின்றன.

இச் சிறு கதைகளின் மூலம் சுமதி சங்கர் என்ன, ஸர் மோகன்லால் என்ன, மிஸ்டர் ரேவடியா என்ன, சாமல்ஷா என்ன, இப்படிப் பல விநோத மனிதர்கள் நமக்கு அறிமுகமாகிறார்கள். அவர்களைக் கண்டு நாம் சிரிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் அவர்கள் மீது படர்ந்திருக்கும் எண்ணங்கள், விசாரங்கள், நம்பிக்கைகள் ஆகியவைகளைப் பற்றிச் சிந்திக்கவும் வேண்டியிருக்கிறது. சிந்திக்க வைக்கிற எந்த இலக்கியப் படைப்பும் நீடித்த ஆயுளுடையதாயிருக்குமென்பதில் ஐயமில்லை.

சிலர் நினைக்கிறார்கள், மொழிபெயர்ப்பென்பது சுலபமான காரியமென்று. இல்லைவே இல்லை. அது கடினமான சாதனை. இந்தக் கடினமான சாதனையில் ஸ்ரீ ரா. வீழிநாதன் வெற்றி பெற்றிருக்கிறார். இதற்காக அவரைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

ஸ்ரீ வீழிநாதன், தமிழ், ஹிந்தி, ஆங்கிலம் முதலிய மொழிகளில் புலமை நிறைந்தவர். இவருடைய இந்தப் புலமை, இந்நூலில் பரந்து காணப்படுகிறது. தமது இந்தப் புலமையை, தமிழுக்கும் பிறமொழிகளுக்குமிடையே ஒரு பாலமாக அவர் அமைத்துக் கொண்டிருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும்.

வித்தையானது வினயத்தினால் சோபிக்கிறதென்று சொல்வார்கள். ஸ்ரீ வீழிநாதன் விஷயத்தில் இதை நிச்சயமாகச் சொல்லலாம். அவருடைய இந்த வினயம் அவருடைய வித்தைக்கு மேலும் மேலும் மெருகு கொடுத்துவர வேண்டும்; இலக்கிய உலகத்தில் அவர் அமர வாழ்வு பெற வேண்டும்; இப்படிச் சொல்லி அவரை என் மனமார வாழ்த்துகின்றேன்.

தியாகராயநகரம்,
சென்னை, 8-10-'57

**வெ. சாமிநாதன்.**

# முகவுரை

"சென்றிடு வீரெட்டுத் திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்."

நந்தமிழ் நாட்டு மகாகவி பாரதியின் இவ்வருள் வாக்கைப் பின் பற்றி நடக்கும் பேறு எனக்கு எனது இளம் பிராயம் முதற்கொண்டே கிடைத்தது. இத்துறையில் உற்சாகமும் ஊக்கமும் ஊட்டி என்னை இறங்கப் பணித்தவர் பேராசிரியர் கல்கி.

ஆனால் எனக்கு ஒரு குறை, நம்மைச் சொந்தமாக எழுத விடாமல் இப்படி மொழி பெயர்க்கப் பணிக்கிறாரே என்று.

என் அகத்தின் கருத்தை ஒருநாள் என் முகமே அவரெதிரே எடுத்துக் காட்டி விட்டது. அன்பு கலந்த முறுவலுடன் அவர் மகா கவி பாரதியின் வாக்கை மேற்கோளாகச் சுட்டிக் காட்டிச் சொன்னார்:

*பாரதியின் இந்த வாக்கை நிறைவேற்றப் பல அன்பர்கள் முன் வந்தால்தானே நம் தமிழ் இலக்கியம் வளமுறும்? அறிஞர் ஸ்ரீ. வெ. சாமிநாத சர்மா, ஸ்ரீ. த. நா. குமாரசாமி போன்றவர்கள் பேரறிஞர் களின் சாத்திரங்களைத் தமிழில் தரவில்லையா? மொழி பெயர்ப்பு என் பது ஒரு அருங்கலை. அதைக் குறைவாக எண்ணாதே. நிறைவாக எண்ணி இப்பணியில் இறங்கு. அவையே உனக்குப் பெரும் புகழ் தேடித்தரும். வெவ்வேறு ஆசிரியர்களின் கருத்தைப் புரிந்துகொண்டு, நடையைப் புரிந்து கொண்டு அவற்றுக்கேற்பத் தமிழ்ப்படுத்துவதில் உள்ள சிரமத்தை நான் நன்கு உணர்வேன். இக்காரியத்தில் நீ வெற்றி கண்டு விட்டாயானால், நீ சொந்தமாக எழுதும்பொழுது, அவ்வாசிரியர்களனைவரும் பகைப்புலனில் நின்று கொண்டு உனக்குக் கைகொடுத்து உதவுவார்கள். உனது எழுத்தும் மெருகு ஏறிச் சோபையுறும். உன் நலனில் அக்கறை கொண்டே இதை நான் சொல்கிறேன்.*

அவரது உற்சாகமூட்டும் இந்த அருமையான உபதேசமே பல நவீனங்களைத் தமிழில் மொழி பெயர்க்கும் வாய்ப்பை எனக்கு அளித் தது. 'கல்கி' ஸ்தாபனம் எனது இந்தப் பணிக்கு அளித்த பேராத ரவை இன்று நினைத்தாலும் எனக்குப் பெருமிதம் உண்டாகிறது.

'கல்கி' ஸ்தாபனம் என்று கூறும்பொழுது அதன் வளர்ச்சி யையே தமது வாழ்வின் இலட்சியமாக கொண்டு நடத்தி வரும் அதன் அதிபர் ஸ்ரீமான் சதாசிவம் அவர்களை நினைக்காமல் இருக்க முடியாது. அவர் எனக்கு அளித்துவரும் உற்சாகத்துக்கும் ஊக்கத் துக்கும் ஒரு கங்கு கரை கிடையாது. 'குலப்பெருமை' என்னும் இக் கதைத் தொகுதி புத்தக உருவம் எடுப்பதற்கும் அவரது ஆதரவும் அநுமதியுமே காரணமாகும். அவருக்குக் கடமைப்பட்டுள்ள நான் வெறும் வார்த்தைகளினால் என் நன்றியைச் சொல்லிவிட முடியுமா?

அமரர் 'கல்கி' அவர்கள் ஸ்ரீ. வெ. சாமிநாத சர்மாவின் பெய ரைக் குறிப்பிட்ட அந்தக் கணமே, எனது படைப்புக்களில் ஏதாவ தொன்று புத்தக உருவம் பெறும் பொழுது, அவரது ஆசிகலந்த முன் னுரை யொன்றைப் பெறவேண்டும் என்ற ஆசை-வித்து என் உள் ளத்திலே விழுந்து விட்டது. அந்த வித்து இன்றுதான் மரமாகித் தழைத்துப் பலன் தந்திருக்கிறது.

நிறைகுடமாக நிற்கும் ஸ்ரீ சர்மாவைப் பற்றிச் சிறியவனாகிய நான் அதிகமாகச் சொல்வது அதிகப் பிரசங்கித்தனமாக முடியும். அன்பும் அடக்கமும் உருவான ஸ்ரீ. சர்மா இன்முகத்தையும் இன் சொல்லையும் தமது பூஷணமாகக் கொண்டவர்கள். அமரகவி பாரதி யின் சொல்லைச் செயலில் காட்டிப் பல மேல்நாட்டுச் சாத்திரங்களைத் தமிழ் நாட்டுக்கு நல்கியவர்.

எனது வேண்டுகோளுக்கு இணங்கி அவர் அளித்துள்ள ஆசி கலந்த முன்னுரை மேலும் மேலும் என்னை இப்பணியில் இறங்கத் தூண்டும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு என் மனமார்ந்த வணக் கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாரதீய வித்யாபவனம் என்றால் ஸ்ரீ. கே. எம். முன்ஷி; ஸ்ரீ. கே. எம். முன்ஷி என்றால் பாரதீய வித்யாபவனம் என்று சொல்லக்கூடிய அளவுக்கு ஒன்றுபட்டு விட்டவர், முன்னாள் உத்தரப் பிரதேசத்துக் கவர்னரான ஸ்ரீ. கே. எம். முன்ஷி அவர்கள். அவரது நூல்களைத் தமிழாக்க வேண்டும் என்ற ஆர்வத்துடன், அவருக்குக் கடிதங்கள் பல எழுதி நான் கொடுத்த சிரமங்கள் கொஞ்சநஞ்சமல்ல. அவ்வள வுக்கும் அன்புடன் பதில் எழுதித் தமது நூல்களைத் தமிழ்ப்படுத்து வதற்கான அநுமதியும் ஆர்வமும் அளித்த அவருக்கு என் உள்ளங் கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாரதீய வித்யாபவனம் என்றதும், அதன் ரிஜிஸ்திரார் ஸ்ரீ. ராம கிருஷ்ணன் அவர்களும் என் கண் முன்னே நிற்கிறார்கள். நேர்முக

மாக அறிமுகம் இல்லாத பொழுதிலும், அவருடன் கடிதத் தொடர்பு கொண்டு அவருக்கும் பல தொந்தரவுகள் அளித்தேன். என்னிடம் அன்பு பாராட்டி ஆக்கமளித்து வரும் அவருக்கும் எனது வணக்கங்கள் உரித்தாகும்.

பாரதி பதிப்பகத்தின் நிர்வாகி திரு. பழ. சிதம்பரம் அவர்கள் என் நெடுநாளைய நண்பர். என் புத்தகங்களை வெளியிட வேண்டும் என்ற ஆசை அவருக்கும் உண்டு. என் நூல்கள் பாரதி பதிப்பகத்தின் மூலம் புத்தகமாக வெளிவர வேண்டும் என்ற ஆவல் எனக்கும் உண்டு. இருவரது அவாவும் இப்பொழுதுதான் நிறைவேறுகின்றது.

ஸ்ரீ. சிதம்பரத்துக்கு நான் நன்றி செலுத்தினுல் அவர் எனக்கு நன்றி செலுத்த வேண்டும். இப்படி ஆசிரியரையும் பிரசுரகர்த்தரையும் நன்றி செலுத்திக் கொள்ளும்படி செய்யும் வல்லமை பெற்றவர்கள், உற்சாகமும் ஊக்கமும் ஊட்டிப் புத்தகமாக வரச் செய்யும் வாசக நேயர்கள்தானே? அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்து விட்டால், நாங்களே எங்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொண்டதாகிவிடும் அல்லவா? ஆகவே நேயர்களுக்கு எங்கள் இதயம் கலந்த நன்றி.

'கல்கி' காரியாலயம்
சென்னை. 8—10—57

**ரா. வீழிநாதன்.**

# குலப்பெருமை

'எல்லாரும் ஓர்குலம், எல்லாரும் ஓர் இனம், எல்லாரும் ஓர் நிறை, எல்லாரும் ஓர் விலை' என்று சமத்துவம் பாராட்டுவதில் எல்லாருமே சூரர்கள் தான். ஆனால் அதற்காக அவனவன் தன் குலாசாரத்தையும் சாதிப் பெருமையையும் விட்டுவிட வேண்டும் என்று எந்தச் சாஸ்திரத்தில் சொல்லி யிருக்கிறது? என்னைக் கேட்டால் அப்படிப் பெருமை பாராட்டிக் கொள்ளுவது குற்றமாகவே இருந்தாலும் கூடப் பாராட்ட வேண்டிய விஷயம். மாபெரும் மனித சமுதாயத்தின் கடைசிக் களங்கமா யிருந்தாலும் அதைப் பாராட்டாமல் இருக்கக் கூடாது என்றுதான் சொல்லுவேன். அப்படியிருக்கும்பொழுது சுமதி சங்கரின் குடும்பம் இந்தக் குற்றத்தைப் பூஷணமாக உடைத்தானதாக இருந்ததென்றால் அதில் தவறென்ன ?

இன்று எங்கு பார்த்தாலும் நடப்பதென்ன? எல்லா ஜனங்களுமே தங்கள் இரண்டு மூன்று தலைமுறைகளை எடுத்துச் சொல்லிப் பெருமைப் பட்டுக் கொள்ளுகிறார்கள். சுமதி சங்கரோ சுத்த ருக்வேதி. ஆச்வலாயனி சாகையில் அஜேயஸ கோத்திரத்தில் உற்பத்தியான உயர்ந்த; உந்நதமான பிராம்மணன். பூமியிலே ஓடும் நதிகள் மறைமுகமாக 'அந்தர் வாஹினி'யாக

ஓடிஞலும் சரி, வெளிப்படையாக 'பஹிர் வாஹினி' யாக ஓடிஞலும் சரி, அவற்றின் உற்பத்தி ஸ்தானம் மலேகள் என்னும் முடிவுக்கு வரத்தானே வேண்டும்? அதே போல சுமதி சங்கரின் வம்ச கௌரவத்தையும் குலப் பெருமையையும் ஆராயப் புகுந்தால், அவன் பிரதி தினமும் தன் பெயரையும் குலத்தையும் மறந்து விடாமல் இருப்பதற்காக, மூன்று வேளேகளும் 'அத்ரேய ஸகோத்ரோத் பன்ஞேஹம்' என்று சொல்லி 'அபிவாதயே' செய்யும்பொழுது அநுசூயாவின் வயிற்றி லிருந்துதான் அவனுடைய வம்சத்தார்கள் உண்டாகி யிருக்கிருர்கள் என்பது ருசுவாகிறது. அதுமட்டும் அல்ல; வம்ச விருக்ஷம் என்னும் வனத்தில் புகுந்து திரிந்து கடைசியில் மூலபருஷரான அத்ரியையும் தேடிக் கண்டு பிடித்து விடுகிருேம். அந்த அத்ரி மகரிஷி என்ன சாமான்யப் பட்டவரா? பிரும்மா, விஷ்ணு, சிவன்—இம்மூவரையும் சீராட்டிப் பாராட்டி வளர்த்த வர். பிரும்மாவே தன் சூத்திரத்தின் மூலம் இதை நிர்விவாதமாக ஒப்புக்கொள்கிருர் என்ருல், சுமதி சங்கரின் குலகௌரவத்தைக் குறை கூற எவனுக்குத் தான் துணிவு உண்டாகும்? இழுக்குக் கற்பிக்க உரிமை தான் ஏது?

இந்த சுத்த வம்ச விருக்ஷத்துக் கெதிரே, சைஞ வின் நிலேதவறிய அரசர்களின் வம்சப் பெருமையே விழலுக் கிறைத்த நீராகிவிடும் என்ருல், சுமதி சங்க ரின் குலப் பெருமையை எவ்வாறு வர்ணிக்க முடியும்? அதுமட்டும் அல்ல; அத்ரி சம்பந்தமாகச் சுமதி சங்கர் பேசுவதை யாராவது கேட்க நேர்ந்து விட்டால், "பிரும்மா, விஷ்ணு, சிவன் இம்மூவரையும் அநுசூயை

மடியில் வைத்து விளையாட்டுக் காட்டிக் கொண்டிருக் கும்பொழுது, சுமதி சங்கரின் முன்னோர்களில் யாராவது ஒருவர் அவர்களுடைய பராக்கிரமச் செயல்களைத் தம் கண்களாலேயே கண்டிருக்க வேண்டும். இல்லா விட்டால் சுமதிசங்கர் இப்படிப் பேச முடியுமா?' என்று தான் எண்ணுவார்கள். ஏதாவது விசேஷத்தையோ சுபகாரியத்தையோ முன்னிட்டு, யாராவது சப்த ரிஷி களுடன் அதாவது ஏழு பாக்குகளுடன் அழைத்துப் போக வந்தால் சுமதி சங்கரின் சித்தப்பா விமதி சங்க ருக்கு இதயம் பெருமையினால் பூரித்துவிடும். அத்ரி ரூபத்தில் வந்திருக்கும் பாக்குகளுக்கு—இல்லை, இல்லை, பாக்கின் உருவத்தில் வந்திருக்கும் அத்ரிக்கு நான்கு சொட்டுச் சந்தனம் அதிகமாக அபிஷேகம் செய்து பெரிய பெரிய பூவிதழ்களாகப் பார்த்து இரண்டு இதழ்கள் போட்டுப் பூஜை செய்யாமல் இருக்கமாட் டார். அதற்குப் பிறகு பக்கத்தில் உட்கார்ந்திருப்பவன் கொஞ்சம் கம்பீர புத்தியுள்ளவன் என்று தோன்றினால், அவனுக்கு அத்ரி—பாக்கைக் காண்பித்து, 'இவர்கள் தான் எங்கள் முன்னோர்கள்!' என்று சொல்லி மிகவும் மரியாதையோடு இரு கைகளாலும் எடுத்து இரு கண் களிலும் ஒற்றிக் கொள்ளுவார்.

ஆனால் குலத்தைப் பற்றி பெருமை பாராட்டிக் கொள்ளுவது இத்துடன் நின்றால் அதை ஒரு புதிய விஷயமாகவோ பெரிய விஷயமாகவோ நாம் எதற்காக எண்ணப் போகிறோம்? ஏனெனில் பிரும்மாவின் ரிஷி புத்திரர்கள் மூலமாகத் தானே பாரத நாட்டின் பிராம் மணர்கள் உண்டாகியிருக்கிறார்கள்! மற்ற நாட்டவர் களோ பிரும்மாவின் விரல் வழியாக உண்டான புத்தி

ரர்களுக்குப் பிறந்தவர்கள். நம் பூதேவர்களோ பிரும்மாவின் வாயிலிருந்தே உண்டானவர்கள் என்பது ஐயந்திரிபற சர்வ நிச்சயமாகிப் போய்விட்ட விஷயம்.

ஆனால் சுமதி சங்கரின் குலப் பெருமைக்கு வேறு பல காரணங்களும் இருந்தன. அவரும் அவர் குடும்பத்தாரும் அந்தப் பேருண்மையைப் பொதுவாக வெளியிடுவதில்லை. மனத்துள்ளேயே மறைத்து வைத்திருந்தார்கள். நமக்கு வெளிப்படையாகத் தெரிந்த விஷயம் என்னவென்றால், அந்தக் குடும்பத்தார்களில் ஒவ்வொருவருடைய பெயருடனும் 'மதி' என்னும் சொல் சேர்ந்தே இருக்கும். ஒருவன் சுமதி என்றால் இன்னொருவன் விமதி. மற்றவன் தீரமதி. அவனுடைய அப்பாவின் பெயர் சங்கர்மதி.

இதற்குக் காரணம் என்னவென்றால், அவர்களுடைய முன்னோர்களில் கௌமதி என்ற பெயருடன் மிகமிகப் பிரதாபம் வாய்ந்த ஒருவர் இருந்திருக்கிறார். ஆகவே, அந்த வம்சத்தார்கள் மற்ற வம்சங்களைக் காட்டிலும் தங்களுடைய வம்சம்தான் மேலானது என்ற முறையில் நடந்து வந்திருக்கிறார்கள். பெருமையுடனும் படாடோபத்துடனும் வாழ்ந்திருக்கிறார்கள். சுமதி சங்கரின் சித்தப்பா ஜாதி—ஜனம், கல்யாணம்—கல்லெடுப்பு, இன்பம்—துன்பம், கஷ்டம்—சுகம் எல்லாவற்றிலும் முதன்மை ஸ்தானமே அதாவது அக்ர தாம்பூலமே பெற்றிருக்கிறார். எந்தக் காரியத்துக்கும் அவர்தான் முன் நின்று அதிகாரம் செய்வார். அவருடைய பெண்கள் மற்றப் பெண்களுடன் விளையாடக் கூடாது. பள்ளிக்கூடத்து உபாத்தியாயினி மார்களுக்

குக்கூட, "ஜாக்கிரதை! என் பெண்களை மற்றப் பெண்களுடன் உட்காரவோ விளையாடவோ விடக் கூடாது!" என்று கடுமையாக உத்தரவிடப்பட்டிருந் தது. இதற்கெல்லாம் காரணம், 'நாங்கள் கௌமதி வம்சத்தில் பிறந்தவர்களாக்கும்!' என்று சொல்லப் படடு வந்தது. அவருடைய நடை உடை, பாவனையும் மிடுக்குமே அலாதி!

'நான் மட்டும் கௌமதி வம்சத்தில் பிறந்தவனு யிருந்தால் இந்தக் காரியத்தைச் செய்யாமல் இருக்க மாட்டேன்' என்று மார்தட்டிக் கூறுவதில் தங்களுக்கு அலாதி கௌரவமும் மதிப்பும் ஏற்பட்டு விட்டதாகவே அந்தக் குடும்பத்தார்கள் எண்ணி வந்தார்கள். கௌமதி வம்சத்தாரின் செல்வாக்கு இம்மியளவுகூடக் குறையாமல் இருப்பதற்கும், அதன் மதிப்பு உயர்வதற் கும் வேண்டிய சகல விதமான முயற்சிகளையும் அக் குடும்பத்தினர் செய்து வந்தனர்.

சுமதி சின்னவன். கௌமதி வம்சத்தில் பிறந்தி ருந்தும்கூட அவனுக்கு அந்தக் குடும்பத்தின் கௌரவம் குறைந்திருப்பதாகவேதான் தோன்றியது. குறிப்பிட்ட பெண்ணுடன் விளையாடக்கூடாது. பள்ளிக்கூடத்தில் மற்ற வீட்டுப் பெண்களுடனோ பையன்களுடனோ சேர்ந்து உட்காராமல் தனித்தே உட்காரவேண்டும். அவர்களுடன் பட்டாணிக் கடலை, வேர்க்கடலை முதலி யவை சாப்பிடக் கூடாது. மழையில் அவர்களுடன் காகிதக் கப்பல் விட்டு விளையாடக்கூடாது—இவ்வா றெல்லாம் எதற்காகத்தான் தடை உத்தரவு போடு கிறார்கள் என்று அவனுக்கு விளங்கவே இல்லை. எப்

பொழுதாவது இதைப்பற்றி அவன் யாரிடமாவது கேட்டுவிட்டால், ஹரமதியும் தீரமதியும் அவனுடைய இந்த வக்கிர புத்தியைக் கண்டு கடிந்து கொள்ளுவார்கள். கௌமதி குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக் காம்பு என்று சொல்லித் திட்டுவார்கள். 'அறிவுள்ளவனாக இரு' என்று உபதேசம் செய்வார்கள்.

அந்தக் குடும்பத்துப் பெண்களுக்குள்ளே அத்தை ஹரமதிக்குத்தான் தன் குடும்ப கௌரவத்தைப் பற்றிக் கவலை அதிகம். அவள் நல்ல தைரியசாலியும்கூட. ஏழு வருஷங்கள்வரை அவள் தன் மாமியாரிடமும் தன் புருஷனிடமும் தன் குலப்பெருமையை நிலை நாட்டுவதற்காகக் கடுமையான வாய்ப்போர் புரிந்தாள். அப்படியும் அவர்களுடைய சின்ன புத்தியில் கௌமதி குடும்பத்தின் குலப் பெருமை பதியவில்லை. ஆகவே, குல விளக்கான ஹரமதி அத்தை, சின்னப் புத்தி படைத்த புக்ககத்தாருடன் குப்பை கொட்ட மனம் இல்லாமல், கணவன் உயிருடன் இருக்கும்பொழுதே கணவனை இழந்தவள்போல வாழாவெட்டியாக, தன் குல விளக்கை அணையாமல் பாதுகாக்கும் பரந்த நல்ல நோக்கத்துடன்தானோ என்னவோ, தான் பிறந்த வீட்டுக்கே வந்து சேர்ந்தாள்!

சுமதி அசட்டுப் பிசட்டு என்று ஏதாவது இல்லாத கேள்விகள் எல்லாம் கேட்டு விட்டால, ஹரமதி அத்தை 'சள்ளுப் புள்ளு' என்று எரிந்து விழுவாள். 'பிள்ளையாண்டானின் வக்கிர புத்தியைப் போக்க மாட்டாயா, பகவானே!' என்று பெருமூச்சுடன் ஆகாயத்தை அண்ணுந்து பார்ப்பாள். அடுத்த நிமிஷம் அந்த இடத்தில் நிற்க மனம் இல்லாமல் பூஜை அறைக்

குள்ளே புகுந்து கதவைத் தாளிட்டுக்கொண்டு விடு வாள். அவள் அப்படிச் செய்வதற்கு ஏதாவது ஒரு முக்கிய காரணம் இல்லாமல் இருக்குமா?

பூஜை அறைக்குள்ளே ஏதோ சிதம்பர ரகசியம் போன்ற அற்புத ரகசியம் இருக்கத்தான் இருந்தது. கெளமதி என்ற பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே எல்லோருடைய கண்களும் பூஜை அறைப் பக்கம் சென்றுவிடும். கெளமதி சங்கர் உயிருடன் அந்த அறைக்குள்ளே உட்கார்ந்திருப்பது போன்ற பிரமை ஏற்பட்டு எல்லோரும் பீதி உறுவார்கள். வருஷத்தில் ஒரு நாள், அதாவது வைகாசி மாதம் சுக்ல பக்ஷ சதுர்த் தசி அன்று வீட்டிலுள்ள பெரியவர்கள் எல்லோரும் ஒன்றுகூடிக் குழந்தைகளின் அறையிலே நெய் விளக்கு ஏற்றி வைத்துவிட்டுப் பூஜை அறையிலே சென்று ஆண்டவனுக்கு நைவேத்தியம் செய்வது என்பது தொன்றுதொட்டு வந்த வழக்கம்.

சுமதிக்கு அந்தக் காட்சியையெல்லாம் காண வேண்டும் என்று ஆவலாயிருக்கும். ஆனால் சித்தப் பாவின் கட்டளையை மீறுவது என்றால் அவனுக்குச் சிம்ம சொப்பனம். பெரியவன் ஆனதும், அவனுக்குப் பூஜை அறைக்குள்ளே கெளமதி தாத்தா உடுத்தி வந்த ஆடை அலங்காராதிகளும் மகுடங்களும் இருப்பதாகச் சொல்லப்பட்டது. அந்த ஆபரணங்கள் கெடாமல் இருக்கும்வரை அந்தக் குடும்பத்தின் பெருமை கடுகள வும் குறையாது என்ற நம்பிக்கை அந்தக் குடும்பத்தார் களிடையே பரிபூரணமாக நிலவியிருந்தது. ஜாதி ஜனங் கள் என்னதான் சொன்னபொழுதிலும் அவர்களிடை யேயும் சில கட்டுக் கதைகள் பரவியிருந்தன. அந்தக்

கதைகள் அனைத்தும் அக் குடும்பத்துக்குப் பெருமை அளிப்பதாகவேதான் அமைந்திருந்தன. சுமதி சங்கர் இன்னும் கொஞ்சம் பெரியவன் ஆனதும், இன்னொரு விஷயமும் அவனுக்குத் தெரியவந்தது. அது என்னவென்றால், இருபத்திரண்டு வயது பூர்த்தி ஆனதும் கௌமதி தாத்தாவின் ஆடை ஆபரணங்களைப் பார்க்கும் பாக்கியம் அந்தக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்த ஒவ்வொரு பிள்ளைக்கும் பெண்ணுக்கும் கிடைக்கும் என்பதுதான்.

சுமதி பெரியவன் ஆக ஆக அவனும் அந்தக் குடும்பத்துக்குக் குலவிளக்காகவே விளங்குவான் என்றுதான் தோன்றியது. அவன் தலை கனத்தது. அவன் சுபாவத்தில் தானாகவே மிடுக்கு ஏறியது; மெருகும் ஏறியது. அவனும் 'தான் கௌமதி வம்சத்தில் பிறந்தவன்' என்பதை அடிக்கடி சொல்லாலும் செயலாலும் நிரூபிக்கலானான். இருபத்திரண்டு வயது ஆவதற்கு முன்னால் அவன் பூஜை அறைக்கு வேண்டுமானால் போக வேண்டாம். ஆனால் தன் கற்பனைக் குதிரையைக் கூடவா தட்டி ஓட்டக் கூடாது? அல்லது ஓட்டத்தான் முடியாதா? அவன் கற்பனைக் குதிரைக்கெதிரே வாயுவேகம், மனோவேகம் எல்லாம் தோற்றுத்தான் போக வேண்டும்!

எந்த எந்த மாதிரியான பகட்டான பட்டாடைகள் இருக்குமோ? 'பள பள பப் பள பள' வென்று கண்களைப் பறிக்கும் என்ன என்ன ஆபரணங்கள் எல்லாம் இருக்குமோ? கிரீடம் வைரம் வைத்து இழைத்ததாக இருக்கலாம். அவர் அணிந்து கொள்ளும் மாலைகளில்

எத்தனை விதமோ? — இவ்வாறெல்லாம் கற்பனையில் இறங்கி விடுவான். கற்பனையில் லயித்த பின் அவனுக்கு விக்ரமாதித்ய மகாராஜாவை எல்லாம் தன் கௌமதி தாத்தாவின் காலில் கட்டித்தான் அடிக்க வேண்டும், தாத்தா அவ்வளவு மேலானவராக இருப்பார் என்ற எண்ணம் எழும். ஆங்கிலம் படிக்க ஆரம்பித்ததும் அவன் முதல காரியமாக மெட்ரிகுலேஷன் வகுப்புக் கென்று ஏற்பட்டதான சரித்திர புஸ்தகங்களைப் புரட் டிக் கௌமதி தாத்தாவின் பெயர் எங்கேயாவது வந்திருக்கிறதா என்று துருவித் துருவித் தேடிப் பார்த் தான். ஏனெனில் அவனுடைய அந்தக் காலத்து அறிவுக்கு அவைதானே பெரிய புஸ்தகங்கள்! அவற் றில் அகப்படாமற் போகவே, சிறிது சிரத்தை குறைந் தது. இருந்தாலும் பள்ளிக்கூடத்து லைப்ரரியிலிருந்து 'மில்' எழுதிய சரித்திரத்தை வாங்கிக் கௌமதி தாத்தாவின் பெயரை அதிலும் தேடிப் பார்த்து விட்டுத் தான் மறுகாரியம் பார்த்தான்.

யாரோ சொன்னார்கள் என்பதை வைத்துக் கொண்டு சுமதி சங்கரைக் காலேஜில் சேர்ப்பதாக நிச்சயித்து விட்டார்கள். போர்டிங்கில் வைத்தால் பையன் கெட்டு விடுவானே என்று எண்ணிச் சுமதி யைத் தெரிந்தவர்கள் வீட்டில் வைத்தார்கள். குலப் பெருமையையும் ஆசாரத்தையும் பாதுகாத்தவாறே, இந்தப் பாழும் வயிற்றுப்பாட்டை உத்தேசித்துச் சுமதி சங்கர் மிலேச்ச பாஷையில் சொல்லித் தரப்படும் மேல் நாட்டுக் கல்வியைப் பயில ஆரம்பித்தான்.

ஆங்கிலக் கல்வியிலே உள்ள அசுத்தத் தன்மை யும் ஆசாரக் குறைவும் சுமதி சங்கரின் பரிசுத்தமான

கௌமதி சுபாவத்தைச் சிறுகச் சிறுக மாற்றி விட்டன. கொஞ்சங் கொஞ்சமாக அவன் 'சுதந்திரம், மனிதனின் பிறப்புரிமை' போன்ற மேல் நாட்டின் தொந்தரவு தரும் வார்த்தைகளைச் செவி மடுத்தான். கடைசியில் கங்கையைப் போலக் கீழ் நோக்கிச் செல்லத் தொடங்கி விட்டான்.

மிக முக்கியமான, ஆனால் பரம ரகசியமான ஒரு விஷயம் என்ன வென்றால், அவன் ஒரு தடவை மூன்று நாட்கள் சேர்ந்தாற்போல சந்தியா வந்தனம் செய்ய வில்லை. ஒரு தடவை காலேஜ் 'டிபேடிங் ஸொஸைட்டி' யிலே 'எல்லாரும் ஓர் இனம்' என்பது பற்றிக் காரசார மாகப் பேசிக் கலக்கி விட்டான். 'நாம் நம் முன்னோர் களின் பெருமையைச் சொல்லி அதன் பலத்தில் உயிர் வாழ்கிறோம்; இது நமக்கு மிக மிக இகழ்ச்சிதரும் விஷயமாகும்' என்று சொல்லித் 'தாழ்வுற்று நின்ற தாமோர் பாரத தேசந் தன்னை'ச் சுட்டிக் காட்டி ஏகமாகப் பொரிந்துதள்ளினான். இதைவிட அவன் தாழ்வுக்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

சுமதிக்கு இதைவிட வேறு வீழ்ச்சி ஏது? கௌமதி குலத்துக்கு உலை வைக்க வந்த கொள்ளி என்றுதானே சுமதியைச் சொல்ல வேண்டும்? கௌமதியின் ஆத்மா சொர்க்கத்திலிருந்ததோ, அல்லது வேறு எங்கு இருந் ததோ, இதைக் கேட்டுக் கதிகலங்கி நடுநடுங்கிப் போய்விட்டது. பிரும்மலோகத்தில் இருந்த அத்ரி ரிஷி யின் கையிலிருந்த கோமுகி கீழே நழுவி விழுந்துவிட் டது. அவருடைய அர்த்தாங்கினியான அநுசூயையின் கண்களிலிருந்து அத்யாத்மக் கண்ணீர் பெரும் வெள்ளக் காடாகப் பெருக்கெடுத்து ஓடியது.

பையன் கெட்டுப் போகக் கெட்டுப் போக, அவனுடைய உள்ளத்திலே பூஜை அறையின் சிதம்பர ரகசியத்தைக் காண வேண்டும் என்ற ஆசை நெய்யில் தீயாக வளர்ந்தது. ஏனெனில் எங்குமே சரித்திரச் சான்றுகள் கிடைக்கவில்லையாதலால் கௌமதி தாத்தா ஜமீன்தாராகவோ, ஜாகீர்தாராகவோதான் இருக்க வேண்டும் என்று தோன்றியது. அதுமட்டும் அல்ல; இருபதுக்கும் இருபத்திரண்டுக்கும் நடுவே உள்ள நாட்கள் இருக்கின்றனவே, அவை அவன் பிராணனையே வாங்கிவிட்டன. கடைசியில் ஒரு விதமாக இருபத்திரண்டாவது வயது பூர்த்தியாகும் காலமும் வந்தது. இதற்குள் சித்தப்பாவும் சிவலோகப் பிராப்தி அடைந்து விடவே, பெருமைக்கு ஆதாரமான அந்த ரகசியத்தைத் தனக்குக் காட்டுமாறு அவன் தன் அத்தையைக் கேட்டான். அந்த ரகசியத்தை அறிந்து கொள்ள அவன் உள்ளம் துடித்த துடிப்பை, இம்மாதிரி ரகசியத்தை அறிந்து கொள்ள ஆவலுள்ளவர்களைத் தவிர வேறு யாரால் உணர முடியும்?

குறிப்பிட்ட நாள் வந்ததும் சுமதி தன் கிராமத்தை அடைந்தான். வீட்டு மாட்டுப் பெண்கள் எல்லோரும் பிறந்தகத்துக்கு அனுப்பப்பட்டு விட்டார்கள். குழந்தைகள் பக்கத்து வீட்டில் விளையாடுவதற்கென்று அனுப்பப்பட்டார்கள். இரண்டு அத்தைகளும் மருமானும் கௌமதி தாத்தாவின் பொருள்களைப் பார்ப்பதற்காகப் பூஜை அறைக்குச் சென்றார்கள். பயம், பக்தி-சிரத்தை முதலியவை தாண்டவமாட அத்ரிக்கும் அநுசூயைக்கும் மானசிகமாகப் பூஜை செய்தார்கள். பிறகு கௌமதி தாத்தா உள்ளே உறங்கிக் கொண்டிருப்பதுபோலவும்

அவரை எழுப்ப விருப்பமில்லாமல் பயந்துகொண்டு நுழைவது போலவும் மூவரும் மிகவும் மெதுவாக அடி மேல் அடி எடுத்து வைத்து உள்ளேசென்றனர். ஒரு அத்தையின் கையில் நெய் விளக்கு இருந்தது. இன்னொருத்தியின் கையில் நைவேத்தியம் இருந்தது. பூஜை அறை கும்மிருட்டாக இருந்தது. ஆகவே, பற்பலவிதப் பூச்சிகள் அங்கே நித்திய வாசம் புரிந்துகொண்டிருந்தன. உயரத்தில் இருந்த மாடத்திலிருந்து ஒரு அத்தை பெட்டி ஒன்றை எடுத்தாள்.

அப்பொழுது சுமதியின் காதுகளில் கொம்பு ஊதுவது போன்ற சத்தம் கேட்டது. இருபத்திரண்டு வருஷங்களாகக் கண்டு வந்த கனவு நனவாகும் நன்னுள் இன்றுதான் வந்தது. அவனுடைய கைகள் நடுங்கின. நா வறண்டது. உதடுகள் துடித்தன. ஒரு அத்தை பெட்டியைக் கீழே வைத்து அத்துடனேயே சேர்க்கப்பட்டிருந்த சாவியைக் கொண்டு அதைத் திறந்தாள். பிறகு இரண்டு அத்தைகளும் பெறுதற்கரிய பொக்கிஷம் கிடைத்துவிட்டது போன்ற பெருமையுடன் சுமதி சங்கரைப் பெட்டியைப் பார்க்குமாறு சொன்னுர்கள். இருட்டில் சுமதி குனிந்து பார்த்தான். உண்மையாகவே வெல்வெட்டு உடை ஒன்று காணப்பட்டது. அதில் பளபளவென்று வெள்ளிபோல ஒரு நாற்கோணமுள்ள பொருள் மின்னிக்கொண்டிருந்தது. சுமதிக்குத் தான் கனவில் கண்டு கொண்டிருந்த ஜரிகை தலைப்பாக்களும் மகுடமும் பொய்த்துப் போவது போலத் தோன்றியது. அந்த வெள்ளிப் பதக்கத்தில் ஏதோ பொறித்திருப்பது போலத் தெரிந்தது. கண்களை அகல விரித்துக் கூர்ந்து கவனித்துப் பார்த்தான். அதில் ஆங்கிலத்தில் ‘சூரத்’ என்று எழுதப்பட்டிருப்பது தெரிந்தது.

"அத்தை! இதில் என்னவோ எழுதியிருக்கிறாற் போலிருக்கிறது. வெளியில் எடுத்து என்னவென்று பார்க்கலாமா?" என்று கேட்டான் சுமதி.

"அதெல்லாம் கூடாது. வெளியில் எடுப்பதாவது? நன்றாயிருக்கிறது!" என்றாள் ஒரு அத்தை.

"அது சரி, அத்தை! நமது இந்தக் கௌமதி தாத்தா யார் என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்றான் சுமதி.

"பார்த்தாயோ, இல்லையோ? இது இங்கிலீஷ் படிப்புப் படித்ததனால் வந்த வினை! இல்லாவிட்டால் இப்படியெல்லாம் கேட்கத் தோன்றுமா?" என்றாள் இன்னொரு அத்தை.

அத்தைகள் 'ஆஹாம்-ஊஹூம்' என்று சொன்ன பிறகு கடைசியாகத் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தனர். சுமதியின் மனத்தில் பலத்த யோசனை எழுந்தது. ஒரு வேளை கௌமதி தாத்தா சூரத்துக்குத் திவானாக இருந்திருக்கலாம் அல்லவா? அல்லது அவருக்கு சூரத் ஜாகீராகக் கிடைத்திருக்கலாம். அப்படி யிருந்தால் அதற்குக் கோர்ட்டில் நடவடிக்கை எடுத்துத் திருப்பி வாங்கிவிடலாம். அதற்காக அயல்நாடு வரை போக நேர்ந்தாலும் சரி, ஒரு கை பார்த்துவிட வேண்டும். கை விட்டுப் போன உரிமை எப்படியும் திரும்ப நம் கைக்குக் கிடைத்துவிடும் அல்லவா?

இவ்விதம் யோசித்தவாறே அவன் பெட்டியிலிருந்த பொருள்களை வெளியே எடுக்கலானான். மிகவும் ஜாக்கிரதையாக வெல் வெட்டுக் கோட்டில் சூரத் என்று

எழுதியிருக்கும் பதக்கத்தைப் பிடித்துத் தூக்கினுன். அதில் எழுதியிருந்த எழுத்துக்கள் எல்லாமே தெரிந்தன. எழுதியிருந்தது இதுதான் :—

''பியூன் ஆவ் மிஸ்டர் ஹாவர்ட் ஹேமல், சூரத்.''

அதைப் படித்ததுதான் தாமதம்; சுமதிக்கு மூர்ச்சை போட்டுவிடும் போலத் தோன்றியது. அவன் கையிலிருந்து அந்தக் கோட்டு கீழே விழுந்துவிட்டது. கௌமதி தாத்தா என்ன செய்து வந்தார் என்பது தெரிந்துவிட்டது. மனம் ஒரு நிலேக்கு வந்ததும் அவன் 'கட கட'வென்று அட்டகாசச் சிரிப்புச் சிரித்தான்.

அத்தைகளுக்கு ஆத்திரம் தாங்கவில்லே. ஆனுல் மருமானின் பிரமை விலகிவிட்டது. இருவருடைய குலப் பெருமையும் ஆழக் குழிதோண்டி அதள பாதாளத்துக்கும் அடியிலே புதைக்கப்பட்டு விட்டது!

* * *

இரவு இரண்டு மணி சுமாருக்கு இரண்டு அத்தைகளும் மருமானும் புழைக்கடை வழியாகப் புறப்பட்டனர். பிறகு பக்கத்து வீட்டிலிருந்த கிணற்றங்கரைக்குச் சென்று கையில் கொண்டு வந்திருந்த பொட்டணத்தைக் கிணற்றில் போட்டு விட்டுப் பேசாமல் திரும்பினர். கௌமதி தாத்தாவின் கௌரவம் கிணற்றிலே 'விஸர்ஜனம்' செய்யப்பட்டு விட்டது!

# இடைக்கால 'மனைவி'!

இருபதாம் நூற்றாண்டிலே வாழும் பத்னி பராய ணர்களான ராமச்சந்திரர்களே! மேலே உள்ள தலைப் பைக் கண்ணுற்று மிரளாதீர்கள்; திடுக்கிட்டு எகிறிக் குதிக்காதீர்கள்; துணுக்குற்றுக் கண்களை மூடிக்கொள் ளாதீர்கள். இதற்குள் என்ன ரகசியம் புதைந்து கிடக் கின்றதோ என்று எண்ணி, அதைக் கண்டு பிடித்து விட்டுத்தான் மறு காரியம் என்று கங்கணம் கட்டிக் கொண்டு மானங்கெட்ட கற்பனையின் உதவியை நாடி வீண் முயற்சியில் இறங்காதீர்கள். ஏனெனில் நான் பத்னி விரதபாலனம் செய்வதில் நம்பிக்கை கொண்ட வன். இவ்விஷயத்தில் நான் யாருக்கும் தாழ்ந்தவன் அல்ல. அப்படியே நான் தப்பித் தவறி மனம் சலித்து மாற முயன்றாலும், என் கிருஹத்தில் இருக்கும் ஜக தம்பா போன்ற என் சக தர்மிணி கத்தியின் கூர்மையை யொத்த இந்த விரதத்திலிருந்து நழுவுவதற்கு எனக்குச் சந்தர்ப்பமோ அவகாசமோ சிறிதும் அளிப்பதில்லை. ஆகவே, அந்தத் தைரியத்தில்தான் நீங்கள் நிஷ்கவலை யாக நிம்மதியாக மேலே படிக்கலாம் என்று நான் தைரியமாகச் சொல்லுகிறேன்.

19......வருஷம் வைகாசி மாதத்திலே விவாகம் என்னும் தொத்து நோய் குஜராத் முழுவதும் தன் பலம்

முழுவதையும் ஒருங்கே காட்டித் தன் கை வரிசை யைக் காட்டியது என்பது எல்லோருக்கும் நினைவிருக்க லாம். அதனால் எத்தனையோ பெண்களுக்கும் பிள்ளை களுக்கும் கால் கட்டுக் கை கட்டுப் போட்டு வாய்ப் பூட்டும் போடப்பட்டது என்பதை யாரும் இவ்வளவு சீக்கிரத்தில் மறந்து விடுவதற்கில்லை.

அதற்கு இரண்டு வருஷங்களுக்கு முன்பு நான் ரெவின்யூ இலாக்காவில் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் என் னும் பதவியில் தாசில்தார்களின் வீட்டிலே பஞ்சபட்ச பரமான்னங்களுடன் நேர்த்தியான விருந்து உண்ணும் உத்தியோகம் பார்த்து வந்தேன். அச்சமயம்தான் எனக்கு **பார்சூவா** கிராமத்து வாசியான **தயால்ஜி பாயி** யுடன் நெருங்கிய நட்பு ஏற்பட்டது. இந்த நட்பு எப்படி ஏற்பட்டது என்பதை ஏராளமாக யுத்தக் கடன் சேக ரித்துக் கொடுத்து அதன் மகிமையின் காரணமாக மாஜிஸ்திரேட் ஆகிவிட்ட நான் இங்கே இச்சமயத்தில் சொல்லுவதற்கில்லை. ஆனால் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் இங்கே சொல்லுவதில் சிறிதும் தவறில்லை என்று எண்ணுகிறேன்.

அந்தக் கல்யாண காலத்தில் அவருடைய மூன்று பிள்ளைகளுக்கும் கல்யாணம் நடப்பதா யிருந்தது. அந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நான் ' வார் லோன் ' வாங்கப் போய் விட்டால் அவர்கள் வீட்டு விக்ன விநாயகரான கணபதியின் விக்ரஹம் கூடத் தும்பிக்கையை நேரே நிமிர்த்திக் கொண்டு உட்கார அஞ்சும் என்றால், நீங்களே என் பெருமையைச் சிந்தித்துப் பார்த்துக் கொள்ளுங்

களேன்! எனக்கும் அவருக்கும் ஏற்பட்ட இந்த நெருங்கிய தொடர்புக்கு இதைக் காட்டிலும் முக்கிய மான வேறு நல்ல காரணத்தை நான் எங்கிருந்து எப்படிக் கற்பித்துக் கூறமுடியும்!

ஸப் கலெக்டர் பதவியை அடைந்திருந்த நான் அப்பொழுதுதான் பூனாவிலிருந்து சர்க்கார் வேலையை முடித்துக் கொண்டு ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந் தேன். எனக்கு இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்யும் உரிமை உண்டு. சர்க்கார் காரியமாகப் போனால் எனக்கு இரண்டாவது வகுப்புக்கு உரிய கட்டணத்தைச் சர்க்கார் கொடுத்து வந்தது. ஆனால் பணத்தை மிச்சம் பிடிக்கும் எண்ணத்தில் நான் மூன் றாவது வகுப்பில்தான் பிரயாணம் செய்வது வழக்கம். ரெயில்வே கட்டணத்தை மட்டும் அல்ல; எனக்குக் கிடைக்கும் தினசரிப் படியிலும்கூட நான் நல்ல மிச்சம் பிடித்து விடுவேன். ஆகவேதான் நான் வண்டி நிற் கும் இடமான அந்தச் சிறு ஸ்டேஷனுக்குச் சென்று— அந்த ஸ்டேஷனின் பெயரை இங்கே குறிப்பிடுவது அநாவசியம்—ஒன்பது மணி பாஸஞ்சர் வண்டிக்கு பார்குவாவுக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு மூன்றாவது வகுப்புப் பெட்டியில் ஏறி உட்கார்ந்தேன்.

இந்த வண்டியில் ஒரு சௌகரியம் என்னவென் றால், பெரும்பாலும் புதிதாகப் பிரயாணம் செய்யும் யாத்ரீகர்கள் தான் ஏறுவார்கள். பழைய பழகிய முகத் தைப் பார்க்க முடியாது. அடிக்கடி பிரயாணம் செய்து அலுத்துப் போயிருக்கும் பிரயாணிகள் இந்த வண் டியை ஏறெடுத்துக் கூடப் பார்க்க மாட்டார்கள். இந்த

வண்டியில் இன்னொரு சௌகரியம் என்னவென்றால், காலை நீட்டிக்கொண்டு 'ஹாயா'கப் படுத்துக் கொள்ள இடம் கிடைக்கும். அடுத்தபடியாக, மேலதிகாரிகள் இதில் பிரயாணம் செய்வது மிகவும் அபூர்வம். ஆகவே, 'மூன்றாவது வகுப்புப் பெட்டியில் ஏன் பிரயாணம் செய்கிறாய்? இன்று 'ஹெட்குவார்ட்டரி'ல் இருக்க வேண்டிய நாளாயிற்றே! எங்கே போகிறாய்?' என்றெல்லாம் தொணதொணவென்று கேள்விகளுக்கு மேல் கேள்விகள் கேட்டு மூளையைக் குழப்பும் மனிதர்களிடம் மாட்டிக் கொள்ளுவதும் அபூர்வம்.

நான் **சர்னி ரோடில்**—அடடா! ஸ்டேஷனின் பெயரைச் சொல்லி விட்டேனா?—பாதகமில்லை; ரயிலேறினேன். நான் ஏறிய வண்டியில் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு இருபது வயதிருக்கலாம். பெண்களுக்கு இயல்பான நாணம் அவள் அழகுக்கு அழகு கொடுத்துக் கொண்டிருந்தது. சிவந்த உதடுகளில் சிரிப்புத் தாண்டவமாடிக் காண்போரின் கண்களைச் சிறைப் படுத்திக் கொண்டிருந்தது. அவளுக்கு அருகில் அவளுடைய இரண்டு வயதுக் குழந்தை குறுகுறுப்பாக உட்கார்ந்திருந்தது. இன்னொரு பலகையில் ஒரு வாலிபன் காலை அந்தப் பெண்ணின் பக்கம் நீட்டிப் படுத்துக் கொண்டு தூங்க முயன்று கொண்டிருந்தான். அவன் அந்தப் பெண்ணின் கணவனாக இருக்க வேண்டும் என்று தோன்றியது.

**கிராண்ட் ரோடில்** வண்டி நின்றதும், வயது முதிர்ந்த **தேசாய்** ஒருவர் கர்நாடக பாணியில் சிவப்புத் தலைப்பா தரித்துக் கொண்டு என் அருகில் வந்து அமர்ந்தார்.

அவர் வாய் சிவக்க, வெற்றிலைச் சாறு வழியத் தாம்பூலம் தரித்துக் கொண்டிருந்தார்.

எனக்கோ பேச்சு என்றால் கொஞ்சம் பிடிக்கும். ஊர் ஊராக, ஜில்லா ஜில்லாவாகச் சுற்றிச் சிநேகம் பிடிப்பதில் எனக்கு நிகர் நான்தான். ஆகவே, தேசாயை மெதுவாகப் பேச்சுக்கு இழுத்து லோகா பிராமமாகப் பேசிச் சிநேகம் செய்துகொண்டேன்.

**பால்கருக்கு** வந்ததும் எனக்குப் பசி எடுத்தது. ராத்திரி பார்குவாவுக்குப் போய் விருந்துச் சாப்பாட்டை ஒரு கை பார்த்தாக வேண்டும். வயிற்றை விருந்துக்குத் தயார் செய்து கொள்ள வெறும் பழங்களை மட்டும் சாப்பிடுவதுதான் நல்லது என்று எண்ணி அரை டஜன் வாழைப் பழத்தை வாங்கி அதில் பாதியை உரித்து வாய் வழியாக வயிற்றுக்குள் தள்ளி மிகுதியைக் காலடி களில் வைத்துக் கொண்டேன்.

கடுகு மலையானது, எள்ளு பனையானது என்ற பழ மொழிகளை நினைவு கூரும்பொழுது நேயர்களிடம் ஒரு விஷயத்தைக் கூறாமல் இருக்க முடியவில்லை. நான் பால்கரில் வாழைப் பழம் வாங்கிப் பாதியைத் தின்று பாதியை எனக்கும் அந்தப் பெண்ணுக்கும் மத்தியில் வைக்காமல் முழுவதையுமே தின்றிருந்தேனால், 'இடைக்கால மனைவி' என்னும் இந்தக் கதையை நான் எழுத வேண்டிய அவசியமும் நேர்ந்திராது; நேயர்களுக் குப் படிக்க வேண்டிய சிரமும் ஏற்பட்டிராது.

ஆனால் நடப்பது என்னவோ நடந்து விட்டது. இரண்டு வயதுகூட நிரம்பாத அந்த அசகாயச் சூரப் பயல் தாயின் பக்கத்திலிருந்து எப்பொழுது கீழே

இறங்கினுனே, எனக்குத் தெரியாது. ஆனந்த நடை போட்டுக் கொண்டும் குதூகலக் குரல் கொடுத்துக் கொண்டும் அவன் மெதுவாக வாழைப் பழத்தை நோக்கிப் போகலானுன்.

நானே பி. ஏ. பட்டம் பெற்றவன். கல்லூரியில் கல்வி பயின்று வந்த காலம் முதற்கொண்டே மாதர் முன்னேற்றம், பெண்கள் பெருமை, ஸ்திரீகள் சுதந் திரம் போன்ற விஷயங்களில் முன்னேற்ற நோக்கங் கொண்டவன் ; ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டும் என்ற கொள்கை கொண் டவன். ஆகவே, என் உள்ளத்தின் ஆழத்தில் அழுந் திக் கிடந்த 'பெண்களுக்குப் பெருமை நிறைந்த உரிமை தர வேண்டும்' என்ற உணர்ச்சி விதை வெடித்தது; அதிலிருந்து முளேயும் கிளம்பியது. உடனே ஒரு வாழைப் பழத்தை எடுத்து விண்டு அந்தக் குழந்தை யின் கையில் கொடுத்தேன். அவன் ஆனந்தத்தால் கண்கள் அகல விரியச் சிரித்த முகத்துடன் என்னேயே பார்த்தவாறிருந்தான். நான் கைநீட்டிக் குழந்தையைப் பக்கத்தில் அழைத்தேன்.

குழந்தையின் தாயார் குனிந்த பார்வையுடன் என்னே ஒருமுறை பார்த்தாள். பிறகு இலேசாகச் சிரித்த வாறு, "இருக்கட்டும், வேண்டாம். வேட்டியை வீணுக்கி விடுவான் !" என்ருள்.

"அதனுல் என்ன ?" என்று நானும் சற்று உரிமை யுடன் சொனனேன். குருட்டாம் போக்கில் வைக்கும் குறி சில சமயம் சரியாகப் பட்டு விடுவதுண்டல்லவா ? அது போல் எங்கள் பேச்சு எங்களிடையே எங்களே

யறியாமல் ஏதோ ஒரு தொடர்பை உண்டு பண்ணி விட்டது போலும்! என் அருகில் உட்கார்ந்திருந்த தேசாய் துப்பறியும் கதை எழுதுவதில் வல்லவரான **ஷெர்லாக் ஹோம்ஸாகவே** ஆகிவிட்டார். அவர் தம் மனத்தில் நான் குழந்தையின் தகப்பனுர் என்றும் அந்தப் பெண் தாயார் என்றும் தீர்மானித்து எங்கள் இருவரையும் கணவன் மனைவியாக்கி மனத்தில் மூன்று முடிச்சும் போட்டுக் கொண்டு விட்டார்.

பால்கரிலிருந்து வண்டி புறப்பட்டதும் தேசாய் தம் பையை அவிழ்த்து வெற்றிலை மடித்துப் பீடா பண்ண ஆரம்பித்தார். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு பீடா பண்ணிவிட்டார். பிறகு சிரித்துப் பேசியவாறே கிழவர் தம் மனைவிக்கு ஒரு பீடாவைக் கொடுத்தார். இன்னென்றைத் தம் வாயில் போட்டுக் கொண்டார். மூன்ருவதை எனக்குக் கொடுத்தார். பிறகு கையினுல் ஜாடை காட்டி நாலாவது பீடாவை அவளுக்கு, அதாவது அந்தப் பெண்ணுக்குக் கொடுக்குமாறு சொல்லி என் கையிலேயே கொடுத்தார்.

எனக்குத் தர்ம சங்கடமாகப் போய்விட்டது. உள்ளத்திலே ஒரு கலவரம் மூண்டது. நானே கல்யாணமானவன். ஸப் கலெக்டர் பதவியில் இருப்பவன். அவளோ வயது வந்த பெண். அத்துடன் கல்யாணமானவள். ஒரு குழந்தைக்குத் தாய் வேறு. அதுமட்டும் அல்ல; எனக்கு முன்பின் சிறிதும் அறிமுகம் இல்லாதவள். இரண்டு வார்த்தைகூட அவளுடன் பேசி நான் அறியேன். அப்படியிருக்கும்பொழுது அவளுக்கு நான் எப்படி வெற்றிலைப் பீடா கொடுப்பது? எனக்குத் தலை

சுழன்றது. அவளுக்குப் பீடா கொடுக்கும் பெருமையை அவரே ஏற்றுக் கொள்ளட்டும் என்று எண்ணி நான் கையினுல் ஜாடை காட்டினேன். பீடாவைப் பெண் ணின் கையில் கொடுக்குமாறு தேசாய்க்கு நாம் வீணில் ஏன் ஜாடை காட்டவேண்டும்? வழியோடு போகிற வினையை யாராவது விலைக்கு வாங்கிக் கொள்வார் களா? நாம் சொல்லி விட்டோம் என்பதற்காகத் தேசாய் தாம் அப்படிச் செய்து விடுவாரா? அப்படிச் செய்ய அவருக்கு என்ன பைத்தியமா பிடித்திருக் கிறது? 'டேய்! நல்ல மனுஷ்யன் அப்பா, நீ! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்!' என்று என் மனம் என்னை அதட்டியது. 'டேய், முட்டாள்! தூங்கும் இந்த ஆசாமி விழித்துக் கொண்டு, அவன் மனைவிக்கு நீ வெற்றிலை கொடுப்பதைத் பார்த்துவிட்டால், உன் எலும்பைச் சுக்குச் சுக்காக முறித்துப் போட்டு விடு வானே! உன் மானம் மரியாதை யெல்லாம் கப்பல் ஏறி விடுமே! ஊர்-உலகம், நாடு-நகரம் எல்லாம் சிரிக் குமே! பொறுப்புத் தெரியாத பிண்டமே!' என்று என்னை இடித்தும் கூறியது.

என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தேன், எதேச்சையாக என் பார்வை அந்தப் பெண்ணின் மீது விழுந்தது. அவள் பார்த்த அந்தப் பார்வை அவளுக்கு விஷயம் நன்கு விளங்கி விட்டது என்பதை எடுத்துக் காட்டியது. தேசாய் தப்பாகப் புரிந்து கொண்டு விட் டார் என்பதை அவள் நன்ருகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் குனிந்த தலை நிமிராமல் வந்த சிரிப்பையும் அடக்க முடியாமல் அவள் அப்படித் திண்டாடுவதற்கு நியாயம் இல்லையல்லவா? அவள்

ஜன்னல் வழியாக முகத்தை வெளியே நீட்டிச் சிரிப்பை அடக்கிக் கொள்ள வெகு பிரயாசைப்பட்டாள். ஆனால் நான் அழுவதா, சிரிப்பதா என்று தீர்மானிக்க முடியா மல் தவித்தேன்.

'அட! நீர் என்ன ஐயா நீர்! விசித்திரப் பிரகிருதியா யிருக்கிறீர்கள்!'' என்றார் தேசாய்.

'ஆமாம்' என்று சொல்ல நானும் வாய் எடுத் தேன். நல்ல வேளையாக நாக்குச் சத்தியாக்கிரஹம் செய்தது. ஏதாவது ஒன்றுக்கொன்று பேச்சுக்கு இடம் ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது என்ற பயம் என்னைப் பிடித்துக் கொண்டது. ஆகவே, அரைக் கண் ணால் அந்தத் தூங்கும் மனிதனைப் பார்த்துக்கொண்டும், அரைக் கண்ணால் அந்தப் பெண்ணைப் பார்த்தவாறும், வெற்றிலைப் பீடாவைத் தேசாயின் கையிலிருந்து வாங் கிப் பயந்தவாறே அந்தப் பெண்ணிடம் நீட்டினேன்.

அந்தப் பெண்ணுக்கும் இது ஏதோ வேடிக்கை யாகத் தோன்றியது போலும், புடவைத் தலைப்புக் குள்ளிருந்த தன் கையை நீட்டி என் கையில் இருந்த பீடாவை வாங்கிக் கொண்டாள். பிறகு இச் செய்கை யினால் பீறிட்டுக் கொண்டு வரும் சிரிப்பை அடக்கிக் கொள்ளுவதற்காக அந்தப் பீடாவையே வாயில் போட் டுக்கொண்டு சுவைக்கலானாள். வாய் நிறைய வெற் றிலையைப் போட்டுக்கொண்டு குதப்பத் தொடங்கி விட்டால், அப்புறம் எப்படிச் சிரிப்பது? ஆனால் எங்கள் கண்கள் பேசாமல் இருந்தால்தானே? ஒன்றை ஒன்று சந்தித்து ஏதோ பேசிக் கொண்டன. அதைத் தொடர்ந்தாற்போல இரண்டு மூன்று நிமிஷங்

களுக்குள்ளாக நிகழ்ந்த விந்தைச் செய்கைகள் நினைவுக்கு வந்தன. கூடவே சிரிப்பும் வந்தது.

இவ்வாறு இரண்டொரு மணி நேரம் கழிந்து விட்டது. நான் இறங்க வேண்டிய ஸ்டேஷனும் வந்து விட்டது. தேசாய் இறங்க வேண்டிய ஸ்டேஷனும் அது தான். படுத்திருந்த அந்த வாலிபனும் தூக்கம் கலைந்து எழுந்து அந்த ஸ்டேஷனில் இறங்கத் தன்னைத் தயார் செய்து கொண்டான். அதைப் பார்த்த அந்தப் பெண் ணும் இறங்க ஆயத்தமானுள். கடந்த இரண்டு மணி நேரப் பதற்றமும், சிரிப்பை அடக்கும் முயற்சியும் எனக்கு இனந்தெரியாத இன்பத்தை அளித்தன. இன்பலோகத்திலே சஞ்சரித்துக் கொண்டிருந்த என் மனத்தை ஸ்டேஷன் இவ்வளவு சீக்கிரம் வந்தது என் னவோ செய்தது.

ஆனுல் என்ன செய்வது? வண்டி நின்றதும் தேசாய் தம் சம்சாரத்துடன் இறங்கி விட்டார். அடுத்த படியாக நான் இறங்கினேன். அழைத்துப்போக வரு கிறவர்கள் நான் எந்த வகுப்பிலிருந்து இறங்குகிறேன் என்பதைப் பார்ப்பதற்கு முன்பாகவே, இரண்டாவது பெட்டிக் கெதிரே போய் நின்றுவிடுவது என் வழக்கம். ஆகவே, நான் மூன்ருவது வகுப்புப் பெட்டிக் கெதிரே அதிக நேரம் நிற்க முடியாதல்லவா? இருந்தாலும் இறங் கும் பொழுது ஒரு முறை திரும்பிப் பார்த்தேன். அவ ளும் பின்னுலேயே இறங்கிக் கொண்டிருந்தாள். இறங்கும் பொழுது, ஆஜானுபாகுவான அந்த வாலிபன் தூக்கத்திருல் கரகரத்த தொண்டையுடன், "நீ இந்தப் பெட்டிக் கெதிரேயே நின்று கொண்டிரு. -**சகுனியா**வின்

வேட்டி இங்கேயே தங்கிப் போய்விட்டது. கொடுத்து விட்டு வந்துவிடுகிறேன்'' என்று சொன்னது என் காதில் தெளிவாக விழுந்தது.

அந்தச் சின்னஞ் சிறு ஸ்டேஷனிலும் கூட நல்ல கூட்டமும் கூச்சலுமாக இருந்தது. இறங்குபவர்களை வரவேற்க வந்தவர்களின் எண்ணிக்கை இறங்குபவர்களைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமா யிருந்தது. நான் என் வழக்கப்படி இறங்கினதும் இரண்டாவது வகுப்புப் பெட்டிக் கெதிரே போய் நின்று கொண்டேன். என் நண்பரின் தமையன் பிள்ளை **மக்கன்** என்பவன் "ஓ ராவ் சாஹேப்! ராவ் சாஹேப்!'' என்று மூச்சு வாங்கக் கூப்பிட்டுக் கொண்டே ஓடிவந்தான்.

"ஏன் மக்கன்ஜி! சௌக்கியந்தானே?'' என்று கேட்டுக் கொண்டே நான் அவன் கையில் என் பையைக் கொடுத்தேன். ஆனால் என் பார்வை மட்டும் ரயிலில் என்னுடன் கூட வந்த—வேட்டியைத் தூக்கிக் கொண்டு என்ஜின் பக்கம் ஓடிய வாலிபன் மீதே இருந்தது. அவன் நாலைந்து தடவை 'சகனியா, சகனியா' என்று கூப்பிட்டான். கடைசியில் அவன் கூப்பிட்ட சகனியா அவனுக்குக் கிடைத்துவிட்டான். ஆகவே, அந்த மனிதன் அவனுடன் பேசுவதற்காக அவன் இருந்த பெட்டிக்குள்ளேயே ஏறிவிட்டான்.

* * *

அவர்கள் பேச்சு முடிவதற்குள்ளாகவே என்ஜின் புறப்படுவதற்கு அறிகுறியாக ஊதிவிட்டது. கார்டு வந்து சட்டென்று அந்தப் பெட்டியின் கதவை அறைந்து சாத்தினார். அதைக் கண்ட அந்த ஆசாமி கீழே இறங்க

முயன்றான். அதைக் கண்ட அந்தப் பார்ஸி கார்டு, " ஏய், உட்காரு ! செத்து விடுவாய் ! வீட்டில் சொல்லிக் கொண்டு வந்தாயா ? எங்கேயாவது விழுந்து கிழுந்து செதத்துத் தொலைக்கப் போகிறாய் ?" என்று எச்சரித்து விட்டு நகர்ந்தார். அதற்குள் வண்டி நகரத் தொடங்கி விட்டது. பாவம், அந்த ஆசாமி இறங்கும் வகை அறியா மல் வண்டிக்குள்ளேயே தங்கி விட்டான்.

அந்தப் பெண்மணியும் குழந்தையும் என்ன ஆவார்கள் ? அவர்களை அழைத்துப் போக யாராவது ஸ்டேஷனுக்கு வந்திருப்பார்களா ? இந்த ஆசாமி இவர் களை எங்கெல்லாந்தான் தேடுவான் ? இவர்கள் நிலை என்ன ஆகும் ?—இம்மாதிரியான பாரமார்த்திக எண் ணங்கள் அலை அலையாக என் மனத்தில் எழுந்தன.

இதே சமயம் மக்கன்ஜி, " ராவ் சாஹேப் ! இங் கேயே நில்லுங்கள். இன்னும் வந்திருப்பவர்களையும் அழைத்து வருகிறேன் !" என்றான்.

" சரி, சரி, போய்ச் சீக்கிரம் அழைத்து வா !" என்று சொல்லிப் பிளாட்பாரத்தில் ஒரு முறை பார்வை யைச் செலுத்தினேன்.

மக்கன்ஜி கொஞ்ச தூரம் சென்றவன் திரும்பி வந்து, " சார் ! நீங்கள், அதோ நிற்கிறது பாருங்கள், அந்த வண்டியில் போய் உட்காருங்கள். நான் இதோ வந்து விட்டேன் !" என்று சொல்லி விட்டு மற்றப் பிர யாணிகளை அழைத்து வருவதற்காகச் சென்றான்.

தயால்ஜிபாய் வீட்டுக்கு இந்த ரயிலில் ஆண், பெண் அடங்கலாகப் பத்து வண்டிகள் நிறைய விருந்

தினர்கள் வருவதா யிருந்தனர். வண்டிகளில் விருந்தினரை ஏற்றி விடுவதற்காக மக்கன்ஜி இங்கும் அங்கும் ஓடியாடிக் கொண்டிருந்தான். என்னுடன் கூடவே ரயிலில் வந்த கிழவர் தேசாயும் 'பரபர' வென்று பம்பரமாகச் சுற்றிக் கொண்டு காரியத்தில் கண்ணுயிருந்தார்.

"ராவ் சாஹேப்! உங்களுடன் இந்த உபாத்தியாயரும், இந்த சேட்ஜியும் வருவார்கள். நீங்கள் புறப்படலாம்!" என்று தூரத்தில் இருந்தவண்ணமே மக்கன்ஜி கூச்சலிட்டான்.

ஆமதாபாத் வாசியான ஒரு சேட்டும் சூரத் தலைப்பாகை தரித்த ஒரு உபாத்தியாயரும் என் வண்டியை நோக்கி வந்தார்கள். நாங்கள் மூவரும் வண்டியேறிப் புறப்பட்டோம். அந்தப் பெண்ணின் கதி என்ன ஆகும் என்ற கவலையில் நான் ஆழ்ந்திருந்தேன். என் மூளை இந்தச் சிந்தனையில் வேகமாகச் சுழன்று கொண்டிருந்தது. அதற்கேற்றாற்போல வண்டியின் சக்கரங்களும் 'கட கட'வென்று சுழன்று வண்டியின் வேகத்தை அதிகப்படுத்திக் கொண்டிருந்தன.

சிறிது நேரத்துக்கெல்லாம் எங்கள் வண்டியைத் தாண்டிக் கொண்டு இன்னொரு வண்டி இன்னும் வேகமாகப் போயிற்று. அதில் அந்த வயது முதிர்ந்த தேசாய் தம் மனைவியுடன் உட்கார்ந்திருந்தார். என்னைப் பார்த்த தேசாய் ஓடும் வண்டியில் இருந்த வண்ணமே, கையினுல் ஜாடை காட்டி, ஏதோ சொன்னுர். "எல்லோரையும் சௌகரியமாக உட்கார வைத்து விட்டேன்!" என்று சொல்வதுபோல என் காதில் விழுந்

தது. அவர் சொன்னதற்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

இவ்விதம் மாட்டு வண்டிகளின் சக்கரங்களி லிருந்து எழுந்த புழுதியினுல் மூச்சுத் திணற ஐந்து மைல் கடந்து நாங்கள் பார்குவா கிராமத்தை அடைந்தோம். என் நண்பர் குசலப் பிரச்னம் விசாரித்து விட்டு, ஜில்லா கலெக்டர் தம்மை எப்படி எல்லாம் ஆட்டி வைத்தார் என்பதை யெல்லாம் சொன்னுர். பிறகு, "எனக்கு அந்தப் பதவி எப்பொழுது கிட்டும்?" என்று கேட்டார். இம்மாதிரி இன்னும் எத்தனை எத்தனையோ கேள்விகள் கேட்டார். எத்தனை கேள்விகள் கேட்டு என்ன? என் கண்களிலிருந்து நாணமே உருவான அந்த நங்கையின் சிரித்த மதிமுகத்தை அவருடைய அந்தக் கேள்விகளால் அகற்ற முடியவில்லை.

எது எப்படிப் போனுல் என்ன? நண்பர் என்னைத் தம் அன்புப் பிணைப்பில் கட்டியே போட்டு விட்டார். நான் வந்திருந்த விருந்தினர்கள் அனைவருக்கும் நடு நாயகமாக விளங்கினேன்! எனக்குக் காட்டிய மரி யாதை சொல்லத் தரம் அன்று. அந்தக் கல்யாணச் சந்தடியிலும், எனக்கு ஏகப்பட்ட ஆசார உபசாரங்கள் செய்தார். அந்த ஊரில் உள்ள இன்னும் சில பிரமுகர் கள் வீட்டுக்கு என் சார்பில் அவரே அழைப்பை ஏற் றுக் கொண்டு, முன் வந்து நடத்தி வைத்தார். நான் தங்குவதற்கு வசதியாகத் தம் வீட்டுக்கு எதிர் வீட்டி லேயே பிரமாதமான ஏற்பாடுகள் செய்து வைத்திருந் தார். இந்த ஆசார உபசாரங்களையும் மரியாதையை யும் கண்ணுற்ற நான் அகமகிழ்ந்தேன். இந்த இலா

காவுக்கு நான் கலெக்டராக வந்தால், நண்பரின் இந்த ஆசார உபசாரங்களை நினைவில் வைத்துக் கொண்டு, அவருக்கு ஏதாவது நல்லது செய்வதென்று மனத்தில் திட சங்கற்பமும் செய்து கொண்டேன்.

தயால்ஜிபாய் தாமே நான் தங்கும் விடுதி வரைக்கும் என்னுடன் வந்தார். என்னுடைய பையை அங்கே கொண்டு வந்து வைக்கச் செய்தார். நான் அதிலிருந்து அல்பக்காக் கோட்டு, புது வேட்டி, புது அங்கவஸ்திரம் முதலியவற்றை எடுத்து அணிந்து கொண்டு கல்யாணக் கூடத்தை அலங்கரிக்க என்னைத் தயார் செய்து கொண்டேன். என் நண்பர் மெதுவான குரலில், "ராவ் சாஹேப்! உத்தரவு வந்து விட்டதா?" என்றார்.

"எதற்கு?" என்று வியப்புடன் கேட்டேன்.

"நீங்கள் நம் ஜில்லாவுக்குக் கலெக்டராக வரப் போவது உண்மைதானே?" என்று இனிமையாகக் கேட்டார் அவர்.

அப்படியா சமாசாரம்! இவ்வளவு மரியாதை, மட்டுக்குக் காரணம் இதுவா? சில நாட்களில் அந்தப் பதவிக்கு என்னைத் தேர்ந்தெடுக்கப் போவதாகத்தான் பேச்சு உலாவி வந்தது. நண்பரின் நம்பிக்கைக் கோட்டை தகர்ந்து நான் வேறு ஜில்லாவுக்குக் பிரதம மாஜிஸ்திரேட்டாக நியமிக்கப்பட்டாலும் படலாம். என்ன ஆகும் என்று யார் கண்டார்கள்? ஆனால் நண்பரின் நம்பிக்கையில் அவநம்பிக்கையை உண்டாக்க நான் விரும்பவில்லை. ஆகவே, "அதற்குத் தானே நான் பூனாவுக்குப் போயிருந்தேன். ஆனால் யாரிடமும் இப்பொழுதே ஒன்றும் சொல்லி விடாதீர்கள்!" என்று

சொல்லி அவருடைய பிரமையைப் பிரமையாகவே இருக்கும்படி மழுப்பி வைத்தேன்.

" அட! எனக்குச் சொல்லித்தர வேண்டுமா ?" என்று சொல்லிவிட்டுத் தயால்ஜி என்னைத் தம் வீட்டுக்குத் தேநீர் அருந்த அழைத்துச் சென்றார்.

*　　　*　　　*

" ராவ் சாஹேப்! நான் இந்த மாடிப் படிக் கதவைக் கீழே தாளிட்டு விடுகிறேன். காலை வேளையில் யாரும் உங்கள் தூக்கத்தைக் கலைத்துத் தொந்தரவு கொடுக்காமல் இருக்க வேண்டும் அல்லவா ?" என்றான் மக்கன்ஜி.

" ரொம்ப சரி!" என்று சொல்லி நான் படியேறி எச்சில் துப்ப ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன். இதற்குள் மக்கன்ஜி கீழே கதவைத் தாளிட்டுக் கொண்டு போய்விட்டான். நான் தூங்குவதற்காக அறைக்குள் நுழைந்தேன். ஒரு மூலையில் ஸ்டேஷனில் பார்த்த அதே பெண் உட்கார்ந்து தூங்கி வழிந்து கொண்டிருந்தாள்.

" ஆ "—என் வாயிலிருந்து என்னையறியாமலே இந்த வார்த்தை எழுந்தது. என் குரலைக் கேட்டு அந்தப் பெண் எழுந்து நின்றாள். " ஆ! நீங்களா! இங்கே எங்கே ?" என்று கேட்டாள். இருவரும் கலவரத்துடன் ஒன்றும் புரியாமல் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு நின்றோம்.

இருள் சூழ்ந்த இரவு. இருவரும் ஒருவருக்கொருவர் மிகச் சமீபத்தில் இருந்தோம். விளக்கு வேறு மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. போதாக்குறைக்கு

எல்லாவற்றுக்கும் மேலாக வாசற் கதவு வேறு தாளிடப் பட்டிருந்தது. அந்த அறியாக் குழந்தையைத் தவிர எங் களிருவருக்கும் மத்தியிலே மூன்றுமவர் யாரும் இல்லே. இதைவிட எங்கள் இருவருக்கும் தனிமையில் சந்திக்க வேறு என்ன வேண்டும் ?

"நீங்கள் இங்கே எப்படி வந்தீர்கள் ?" என்று சுய நினைவை வரவழைத்துக்கொண்டு கேட்டேன்.

"ஏன் ? நாங்கள் இங்கே கல்யாணத்துக்கு வந் திருக்கிறோம் !" என்றுள் அவள்.

"அப்படியா ? நீங்களும் பார்குவாவுக்குத்தான் வந்து கொண்டிருந்தீர்களா ?"—வேறு என்ன கேட்பது என்று புரியாமல் போகவே, நான் இந்தக் கேள்வியைக் கேட்டு வைத்தேன்.

"இல்லே, இல்லே; இது **பாவ்கோடி** அல்லவா ?" பெண்களுக்கே இயல்பான நிஷ்கவலேயுடன் அவள் சொல்லி வைத்தாள்.

"இல்லே, இது பார்குவா. இந்த வீடு இந்த ஊரில் மிகப் பிரபலஸ்தரான தயால்ஜிபாயியின் வீடு !" என்று அவளுக்குப் புரிய வைத்தேன் நான்.

"என்ன, என்ன ? இது பாவ்கோடி இல்லேயா ? அப்படியானல் என்னே இங்கே ஏன் அழைத்துக் கொண்டு வந்தார்கள் ?" என்று ஏகமாகப் பதறிப் போய்க் கேட்டாள் அவள்.

"அதனுல்தான் உங்கள் கணவர் ரயிலிலேயே தங்கி விட்டாரோ ?" என்று கேட்டேன்.

" ஆ! என்ன?" என்று இன்னும் பதறிப் போய்த் துடிதுடித்துக் கேட்டாள் அவள்.

" என்னவா? சகனியாவின் வேட்டியைக் கொடுத்து வருகிறேன் என்று சொல்லி முன் பெட்டியில் போய் ஏறிக்கொண்டார் அல்லவா? அப்பொழுது வண்டி புறப்பட்டு விட்டது! அவர் வண்டியுடன் போனதை நான் என்னுடைய இந்தக் கண்களாலேயே பார்த்தேன்!" என்றேன்.

" என்ன, நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்றே எனக்கு விளங்கவில்லையே! குழந்தைக்கு அப்பா இன்னொரு வண்டியில் உட்கார்ந்திருக்கிறார் என்று அந்தத் தேசாய்க் கிழவர் சொல்லிப் போனாரே! அப்புறம் யாரோ மக்கன்ஜியாம், அவர் வந்து என்னை இன்னொரு வண்டியில் ஏற்றி விட்டுப் போனார்!" என்று அவள் களையிழந்த முகத்துடன் சொன்னாள்.

அப்புறம் தான்—அதாவது அவள் சொன்னதைக் கேட்டபின்தான்—எனக்கு விஷயம் உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்கியது. நான் நெற்றியைப் பிடித்துக் கொண்டு அப்படியே அயர்ந்து போய் உட்கார்ந்து விட்டேன். இம்மாதிரித் தர்ம சங்கடத்தில் மாட்டிக் கொண்டிருந்த பொழுதிலும், அந்த விஷயத்தை நினைத்துப் பார்த்ததும் என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. " அட கடவுளே!" என்றேன்.

" கடவுளைக் கூப்பிட்டு என்ன பிரயோஜனம்? இப்பொழுது என்ன செய்வது என்று எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!" என்று கூறி அவள் தன் தலையை இறுகப் பிடித்துக் கொண்டாள்.

"எல்லாம் அந்தக் கிழவர் செய்த குழப்பம். எல்லாரையும் சரியாக உட்கார வைத்தாகி விட்டது என்று என்னிடம் வந்து சொல்லிப் போனார். அப்பொழுது அவர் சொன்னது எனக்குச் சரியாகப் புரியவில்லை. யாரை உட்கார வைத்தால் என்ன, உட்கார வைக்கா விட்டால் என்ன என்று எண்ணிக் கொண்டிருந்து விட்டேன். இப்பொழுதல்லவா விஷயம் புரிந்தது!"

"அப்படியானால் என்னை உங்கள்......" இதற்கு மேல் வாக்கியத்தை முடிக்க முடியாமல் அவள் வெட்கம் காரணமாக வெளிறிய முகத்துடன் தலை குனிந்தாள். பிறகு உதடுகளில் இளநகை தாண்டவமாட, "இது பெரிய தர்ம சங்கடமாக அல்லவா ஆகிவிட்டது?" என்றாள்.

"தர்ம சங்கடம் என்றால் சாமான்யமான தர்ம சங்கடமா?—ஆமாம், வெற்றிலைப் பீடா வாங்கிக் கொள்ளும்பொழுது நீங்கள் இதைப் புரிந்து கொள்ளவில்லையா?" என்று கேட்டேன்.

அவள் அதற்குப் பதில் சொல்லாமல் மழுப்பி விட்டு, "அது எக்கேடாவது கெட்டுப் போகட்டும். இப்பொழுது அவர் நிலைமை என்ன ஆகும்?" என்று மிகக் கலவரத்துடன் என்னைக் கேட்டாள்.

"என்ன ஆகும்? அடுத்த வண்டியில் திரும்பி வந்து விடுகிறார்!" என்றேன்.

"ஆமாம், நம் நிலைமை...?"

"நம் நிலைமைக்கு என்ன?"

"ஆமாம், அப்படியானால் உங்கள் காரணமாகத் தான் எனக்கு இந்த மட்டு-மரியாதை, வசதி-கிசதி, விருந்து-கிருந்து, ராஜோபசாரம் எல்லாம் கிடைத்திருக் கிறது என்று சொல்லுங்கள்!"

"ஆமாம்! அப்படித்தான் இருக்க வேண்டும்" என்று நானும் ஆமோதித்தேன்.

பிறகு நாங்கள் இருவரும் சிறிது நேரம் பேசாமல் இருந்தோம். பெண்களுக்கு இயல்பான நாணம் அவளை மேலே பேசவிடவில்லை. பொறியில் அகப்பட்ட எலி போல் அவள் மனம் அலை பாய்ந்திருக்க வேண் டும். சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் என்ன நினைத் துக் கொண்டாளோ, "இனி என்ன ஆகும்?" என்ற கேள்வியைக் கேட்டுவிட்டு என்னையே பார்க்கலானாள்.

பாவம், அவள் மிகவும் பதறிப் போயிருந்தாள். எனக்கும் என்ன பதில் சொல்வதென்று புரியவில்லை. நானும் அவள் முகத்தையே பார்த்தேன். "ஐயையோ! நான் என்ன செய்வேன்?" என்று கேட்டவள் அந்தப் பதற்றத்திலும் தன்னை மறந்து 'கல கல'வென்று சிரித்து விட்டாள். என்னாலும் பேசாமல் இருக்க முடியவில்லை. நானும் ஒரேயடியாக மடைவாய் திறந்து விட்டது போலக் 'கட கட' வென்று சிரித்து விட்டேன். பிறகு, 'இந்தக் கஷ்டத்திலிருந்து எப்படி விடுதலை கிடைக் கும்?' என்று கண்டு பிடிப்பதற்காக நாங்கள் இருவ ரும் ஏககாலத்தில் ஜன்னலண்டை சென்றோம்.

"ஆமாம், யாரிடமாவது சொல்லிப் பார்த்தால் என்ன?" என்று அவள் ஆரம்பித்தாள்.

"பார்க்கலாம். ஆனால் எல்லோரும் தூங்கிப் போய்விட்டார்களே!" நான் நம்பிக்கை இழந்து திரும்பினேன்.—"இதை யாரிடம் போய்ச் சொல்லுவது? எப்படிச் சொல்வது? சொன்னால் மானம், மரியாதை எல்லாம் காற்றாகப் பறந்து விடாதா?" என்று கூறியவாறே அறையின் மத்தியில் தரையில் போய்த் 'தொபுகடீர்' என்று உட்கார்ந்து கொண்டேன்.

"நீங்கள் சொல்லுவது ஒரு விதத்தில் நியாயம் தான். இந்தச் சமயம் யாரிடம் போய் என்னத்தைச் சொல்லுவது?...இந்தப் பிள்ளையைப் பெற்ற தகப்பனுக்குத் தெரிந்தால் என் உயிரை வாங்கி விடுவானே?"

"இங்கிருக்கிறவர்களுக் கெல்லாம் தெரிந்தால் என் மானத்தை வாங்கி விடுவார்களே! நானோ ராவ் சாஹேப்! என் கதி என்ன ஆவது?"—நான் கவலைப் பட்டுக்கொண்டு என் பதற்றத்தைக் காட்டினேன். அவரவர் கவலை அவரவர்க்கு!

"சுகமோ, துக்கமோ எப்படியாவது இராப் பொழுதை ஓட்டி விடுவோம்!" என்றாள் அவள்.

"நான் தனியாகத் தூங்கக் கீழே இறங்கிப் போய் விடட்டுமா?" என்று நான் அவளைக் கேட்டேன். அதைத் தொடர்ந்தாற் போலவே, "கீழே போய்க் கதவைத் திறக்க முயற்சித்தால் ஊர் முழுவதும் விழித்துக் கொண்டு விடுமே! என்ன செய்வது?" என்ற சந்தேகத்தையும் நானே எழுப்பினேன்.

"போதாக் குறைக்கு இது கல்யாண வீடு வேறு ஆயிற்றே!" என்று ஞாபகப்படுத்தி அவள் என் சந்தேகத்துக்கு இன்னும் அதிக வலுவூட்டினாள்.

நான் வாய் பேசாமல் மௌனமாக இருந்தேன்.

"ஆனல் பொழுது விடிந்தால் நான் யாரிடம் என்னவென்று சொல்லுவேன்?" என்று அவள் இன்னொரு புதிய சிரமத்தையும் சங்கடத்தையும் சுட்டிக் காட்டி என்னைக் கேட்டாள்.

"அதைப்பற்றி இப்பொழுது என்ன கவலை? எப்படியாவது சமாளித்துக் கொள்ளலாம். உங்களை நான் பாவ்கோடிக்கே கொண்டுபோய் விட்டு வந்து விடுகிறேன்!" என்று சொன்னேன்.

"ஆமாம், அதுதான் சரியான யோசனை!" என்று அவள் என்னோடு ஒத்துப் பாடினள்.

இந்தச் சிரமமான பிரச்னையை ஒருவாறு தீர்த்துக் கொண்ட பின்னர் அவள் அந்த அறையின் அகல நீளத்தைத் தன் கண்களாலேயே அளந்து பார்த்துக் கொண்டாள். விளக்கின் மங்கிய ஒளியையும் மதிப்பிட்டுக் கொண்டாள். பிறகு என் மீது பார்வையைப் புதைத்தாள். நானும் அந்த சமயம் அதே காரியத்தைத்தான் செய்து முடித்து அவள் பக்கம் பார்வையைத் திருப்பியிருந்தேன். என் முகத்தைப் பார்த்த அவள் இலேசாகச் சிரித்தாள். பிறகு தலையைக் குனிந்து பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள். நானும் பக்கத்தில் பார்வையைத் திருப்பிக் கொண்டேன். இச்செய்கையினல் எங்களையும் மீறி எங்களுக்குச் சிரிப்பு வந்து விட்டது. கடைசியில் இருவரும் 'கலகல'வென்று சிரித்து அந்த அறையையே அதிரச் செய்து விட்டோம்.

எங்கள் சிரிப்பொலியைக் கேட்டு எதிர் வீட்டு ஜன்னல் இலேசாகத் திறந்ததையும், எங்கள் தம்பதி விநோதத்தை அங்கிருந்த வண்ணமே யாரோ கண்டு ஆனந்திக்க முயல்வதையும் நான் கண்ணுற்றேன்.

என் வாய் திறந்தது திறந்தபடியே இருந்து விட்டது. "கட்டையிலே போகிறவன்!" என்று அவள் என் காதுகளில் விழும்படியாகத் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டாள்.

அவள் குறிப்பறிந்த நான் மெதுவாக எழுந்து சென்று எதிர் ஜன்னல் கதவைச் சாற்றி விட்டு வந்தேன். எங்கே தூங்குவது, எப்படித் தூங்குவது என்ற எங்கள் பிரச்னை தீர்க்கப்படாமலேயே கிடந்தது.

முன் உட்கார்ந்த இடத்துக்கே வந்து நான் உட்கார்ந்து கொண்டேன். மறுபடியும் எங்கள் இருவர் பார்வையும் அந்த சிறு அறையை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டுப் பிறகு எங்களிலேயே வந்து லயித்தது. இம்மாதிரி எத்தனை தடவை செய்தோமோ, சட்டென்று எங்கள் கண்களில் விளக்குத் தட்டுப்பட்டது. அடுத்த கணம் ஏககாலத்தில் எங்கள் இருவருக்குமே படுத்துத் தூங்கி விடவேண்டும் என்ற எண்ணம் எழுந்தது.

விருந்தாளிகள் வந்து ஏகமாகக் குழுமி விடவே தயால்ஜி பாயியினால் எங்களுக்கு ஒரே ஒரு அறைதான் ஒழித்துக் கொடுக்க முடிந்திருந்தது. அதில் ஜமக்காளமோ, கம்பளியோகூட விரிக்கப்பட்டிருக்கவில்லை. எங்கள் இருவருடைய மூளையையும் தூங்க வேண்டும்

என்ற எண்ணம் முற்றுகையிட்டுக் கொண்டிருந்ததே தவிரத் தூங்க வழி தோன்றவில்லை.

“மக்கன்ஜியை எழுப்பி இன்னொரு படுக்கை கேட்டு வாங்கினால் என்ன?” என்றேன் நான்.

“கேட்கலாம். ஆனால் மற்றவர்களும் விழித்துக் கொண்டு விட்டால்...” என்ற அதே சிரமத்தை மறுபடி யும் அவள் நினைவுறுத்தினாள்.

“இன்னொரு படுக்கை இல்லாமல் இந்தப் படுக் கையையே இரண்டு பேரும்......” என்று நான் ஆரம் பித்தேன்.

“ஐயையோ!” என்று சொல்லி இரு கைகளையும் அவள் பிசைந்தாள். அப்பொழுது அவளுடைய நாணிக் கோணிக்கொண்ட அழகைக் காணக் கோடிக் கண் கள்தான் வேண்டும். ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்ட எங்களுக்குச் சிரிப்பதைத் தவிர வேறு வழி தோன்றாமற் போகவே மறுபடியும் சிரித்தோம்.

“ஆமாம். யாருக்காவது தெரிந்துவிட்டால்...?” என்று அவள் மறுபடியும் ஆரம்பித்தாள்.

“அதைத்தானே நானும் யோசித்துக் கொண்டி ருக்கிறேன்!” என்று சொன்ன நான் மறுபடியும் ஒரு முறை என்னை மீறிச் சிரித்தேன்.

சிறிது நேரம் இருவரும் பேசாமல் இருந்தோம். எனக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றிற்று.

“ஒரு காரியம் செய்தால் என்ன?” என்றேன்.

"என்ன?"—ஆவலுடன் கேட்டாள் அவள்.

இந்தத் தலையணையின் ஒரு பக்கத்தை நான் தலைக்கு உயரமாக வைத்துக்கொள்கிறேன். நீங்கள் இன்னொரு பக்கத்தை வைத்துக் கொள்ளுங்கள். எனக்குத் தலைக்கு உயரமாக ஏதாவது வைத்துக் கொண்டால்தான் தூக்கம் வரும்!"

"எனக்கும் அப்படித்தான். தலைக்கு உயரம் இல்லாவிட்டால் தூக்கம் வருவதில்லை!"

"இந்தக் குழந்தை நமக்கு நடுவில் தூங்கட்டும்"—அப்பொழுது நான் அந்தக் குழந்தையை எங்கள் இருவருக்கும் இடையே சுவர்போல ஒரு மறைப்பாக உபயோகப்படுத்திக் கொள்ள முயன்றேன். இதைச் சொன்ன பிறகு, நான் கோட்டு, ஷர்ட்டு, தலைப்பாகை முதலியவற்றைக் கழற்றி ஒரு புறமாக வைத்துவிட்டுப் படுக்க என்னைத் தயார் செய்து கொண்டேன்.

"ஏகப்பட்ட ஆசார—உபசாரங்கள் செய்து எனக்கும் வயிறு வெடிக்க விருந்து செய்துவைத்து விட்டார்கள்!" என்றாள் அவள்.

நாங்கள் இருவரும் தலையணையில் பாதிப் பாதியைத் தலைக்கு உயரமாக வைத்துக்கொண்டு படுத்துத் தூங்க முயன்றோம்.

எங்களுடைய இந்த முயற்சி வெற்றி அடைவதற்கு முன்பாகவே பையன் கீழ் ஸ்தாயியில் முகாரி ராகத்தை ஆலாபனம் செய்யத் தொடங்கிவிட்டான். ஆகவே,

அவன் தாயார் எழுந்து உட்கார்ந்து அவன் அழுகையை ஓய்க்க முயன்ருள்.

"ஏன்? என்ன வேணுமாம் அவனுக்கு?" என்று நானும் தூங்கும் முயற்சியைப் பாதியிலேயே கைவிட்டு விட்டு அவளைப் பார்த்துக் கேட்டேன்.

அவள் தன் குழந்தையின் அழுகையை ஓய்க்க என்ன வெல்லாமோ செய்து பார்த்துவிட்டாள். ஆனுல் அதற்கெல்லாம் அவன் அழுகை ஓய்வதாயில்லை. வர வர உச்சஸ்தாயியை எட்டிப் பிடிக்க ஆரம்பித்தது.

கடைசியில் என்னுல் பேசாமல் இருக்க முடிய வில்லை. "என்ன வேண்டுமாம், அவனுக்கு?" என்று சலிப்புடன் கேட்டேன்.

என் கேள்வியைக் கேட்ட அந்தப் பெண்ணின் முகத்தில் நாணம் படர்ந்தது. முகத்தைப் புடவைத் தலைப்பில் புதைத்துக்கொண்டு சிரிக்கலாஞள்.

"என்ன விஷயம்?"—அதில் ஏதோ ரகசியம் இருப்பதாக எண்ணி நான் திருப்பித் திருப்பிப் பல தடவைகள் அவளை அதே கேள்வியைக் கேட்டுத் திக்கு முக்காட வைத்துவிட்டேன்.

"ஒன்றும் இல்லை. இவன் அப்பாதான் தினமும் இவனைத் தட்டித் தூங்கப் பண்ணுவது வழக்கம். அதற் காகத்தான் அழுகிருன்!" என்று குறும்பாகச் சிரித்த வாறே நாணம் பொங்கத் தலையைத் தரையில் புதைத்த வண்ணம் அவள் சொன்ஞள்.

அட, கஷ்டமே!

"இவ்வளவுதானே விஷயம்! சரி, நான் தட்டித் தூங்கப் பண்ணுகிறேன். அவனைத் தூக்கி இப்படிப் படுக்கையில் போடுங்கள்!" என்று சொல்லிக் குழந்தையை என் அருகில் இழுத்துப் போட்டுக்கொண்டு தட்டித் தூங்கப் பண்ண முயன்றேன்.

பயல் சரியான பயல்தான்! என் கை பட்டதும் கண்களை மூடிவிட்டான். வெற்றி மகிழ்ச்சியுடன் நான் அந்தப் பெண்ணைப் பார்த்தேன். அவளுக்கு அடக்க மாட்டாத சிரிப்பு வந்தது. மிஷினை முடுக்கிவிட்டதும் குழாயில் 'குபுக் குபுக்' என்று தண்ணீர் பொங்கி வருமே, அதுபோல அவள் விட்டு விட்டுக் 'கலீர், கலீர்' எனச் சிரித்தாள்.

பிறகு நாங்கள் இருவரும் ஒரே தலையணையைத் தலைக்கு உயரமாக வைத்துக்கொண்டு எதிரும் புதிருமாகப் படுத்து விட்டோம். பிறகு தூக்கத்தை வரவழைக்கப் பிரும்மப் பிரயத்தனம் செய்தோம். சாதாரணமாக எனக்குத் தூக்கம் என்றாலே ரொம்பப் பிடிக்கும். தூக்கத்தில் கும்பகர்ணன் என்பார்களே, அவன்கூட என்னிடம் சிற்சில சமயம் பிச்சைதான் வாங்கவேண்டும். இன்றைக்குக் கிடைத்தது போன்ற ஆசார உபசாரமான விருநது வேறு என்றைக்காவது கிடைத்திருந்தால், கண்களை மூடியதுமே நான் கண் அயர்ந்திருப்பேன். ஆனால் இதுவோ புது இடம். இரண்டாவதாக அன்றைக்கு எத்தனையோ வீடுகளில் தேநீர் அருந்தியிருந்தேன். அதையெல்லாம்விட முன்பின் பழக்கமில்

லாத ஒரு பெண் எனக்குத் தூக்கத்துக்குத் துணைவி யாக வாய்த்திருந்தாள். அப்படி யிருக்கும்பொழுது தூக்கம் எங்கிருந்து வரும்? தலைவலி மண்டையைப் பிளந்தது. மூச்சுக் காற்றில் உஷ்ணம் ஏறியது. கை கால்கள் முறுக்கிக்கொண்டு முட்டுகளில் கடுத்தன. ஒன்று, இரண்டு, மூன்று நூறுவரைக்கும் எண்ணி னேன். ஆயிரம் தடவை ராமநாமத்தை ஜபித்தேன். இந்திய சட்டத்தின் பிரிவு—உபபிரிவுகளை ஒரு முறை ஞாபகப்படுத்திக் கொண்டேன். என்ன செய்து என்ன? கண்கள் திறந்தது திறந்தபடி இருந்தனவே யொழிய இமை கொட்டவில்லை. கண் கொட்டாம லிருந்த எனக்கு அந்தப் பெண்ணும் கண் கொட்டின தாகத் தெரியவில்லை.

தூக்கமும் வரவில்லை. உள்ளமும் பதற்றத்தில் சோர்ந்து விட்டது. உள்ளமும் உடலும் சோர்ந்த அந்தச் சமயத்தில், மறுபடியும் அந்தப் பையன் தூக்கக் கலக் கத்தில் ஸ்வரம் பாடத் தொடங்கினன். நான் ஒரு கையினால் அவன் முதுகில் தட்ட ஆரம்பித்தேன்.

சோர்ந்து புரண்டு படுத்த அந்தப் பெண்ணும் குழந்தை அழுவதை அறிந்து தாயின் இயல்புக் கேற்பக் கையை நீட்டினாள். எங்கள் இருவர் கைகளும் ஒன்றை ஒன்று ஸ்பரிசித்துக் கொண்டு விட்டன.

“அட கடவுளே!” என்று நான் என்னையும் அறி யாமல் கூறிய வண்ணம் தீயை மிதித்து விட்டவன் போலத் துள்ளி எழுந்து உட்கார்ந்தேன்.

அந்தப் பெண்ணும் எழுந்து உட்கார்ந்தாள். "அடி அம்மா!" என்ற சொல் அவள் வாயிலிருந்து அவளை யறியாமலேயே வெளி வந்தது.

நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் மறுபடியும் பார்த்துக் கொண்டோம். தூக்கம் வராமல் தவித்துக் கொண்டிருந்த நாங்கள் எங்களை யறியாமலே இன் னொரு முறையும் சிரித்துவிட்டோம்.

"ஆமாம், பொழுது எப்பொழுது விடியுமோ, புரியவில்லையே!" என்றாள் அந்தப் பெண்.

"நானும் அதையேதான் யோசித்துக் கொண்டிருக் கிறேன். எனக்கும் புரியவில்லை!" என்றேன் நான்.

எங்கள் கேள்விக்குப் பதில் சொல்லுவதுபோல் விளக்கின் ஒளி பளிச்சென்று சுடர்விட்டுப் பிரகாசித்தது. நாங்கள் பயத்தினால் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம். பிறகு விளக்கின் பக்கம் பார்வையைத் திருப்பினோம். அதற்குள் விளக்கு அணைந்துவிட்டது.

* * *

விடியற்காலை ஐந்து மணி சுமாருக்கு நான் மாடிக் கதவைத் திறந்தே தீருவது என்று துணிந்து தீர்மானித்து விட்டேன். நேரே கதவைத் திறந்துகொண்டு தயால் ஜியைக் கூப்பிடப் போனேன்.

"தயால்ஜிபாய்! நான் இப்பொழுதே போய் ஆக வேண்டும்!" என்றேன் அவரை எழுப்பி.

"ஏன் சார்! இவ்வளவு அவசரம் என்ன?" என்று அவர் மிகவும் வினயத்துடன் கேட்டார். நான்

கோபித்துக்கொண்டு விட்டேன் என்று அவருக்குத் தோன்றியது போலும்!

" இங்கே வருகிற அவசரத்திலே இன்று கமிஷனரைப் பார்க்க வேண்டும் என்பதையே மறந்து விட்டேன். அதனுல்தான்..." என்றேன்.

" அடடா! அப்படியானுல் இப்பொழுது என்ன செய்வது?" என்ருர் அவர்.

" பரவாயில்லை. காலையில் இங்கிருந்து ஒரு வண்டி போகிறதல்லவா? அது நாலு மணிக்கெல்லாம் பம்பாய் போய்ச் சேர்ந்துவிடும்!" என்றேன்.

" அட ராமா! சரி, நீங்கள் புறப்படுங்கள். உங்கள் மனைவி இன்னும் இரண்டு நாள் இங்கு இருந்துவிட்டு வரட்டும்!" என்ருர் தயால்ஜிபாய்.

" இல்லை. அதுவும் முடியாது. குழந்தையை டாக்டரிடம் காண்பிக்க வேண்டும்!" என்றேன்.

தயால்ஜிபாய்க்கு மிகவும் மன வருத்தம்தான். இருந்தாலும் வேலையின் முக்கியத்தைக் கருதி உடனே வண்டியைப் பூட்டச் சொன்ஞர். மக்கன்ஜியையும் கூப்பிட்டு எங்களை ஸ்டேஷன்வரை கொண்டுவிட்டு வருமாறு உத்தரவிட்டார். மக்கன்ஜி கூடவருவதை நான் விரும்பவில்லை. ஆகவே, வெகு சிரமப்பட்டு அவனைத் தடுத்து நிறுத்தினேன். கடைசியில் அவசர அவசரமாகக் காலைச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு, நானும் என் இடைக்கால 'மனைவி'யும்

சிரித்த முகத்துடன் எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு ஸ்டேஷனுக்குப் புறப்பட்டோம்.

வழியில் நாங்கள் வார்த்தை யாடிக்கொண்டே போனோம். இரவின் இருள் அகன்றதுபோலவே, எங்களிடையே குடிகொண்டிருந்த குழப்பமும் வெட்கமும் அகன்றன. கடைசியில் ஸ்டேஷனும் வந்துவிட்டது. வண்டிக்காரனை அதிக நேரம் காக்க வைப்பது சரியாகப் படவில்லை. ஆகவே, அவனுக்கு ஒரு ரூபாய் இனும் கொடுத்து அவனை அனுப்பிவிட்டேன். எங்கள் மனத்தை அழுத்திக் கொண்டிருந்த சுமை நேரமாக, நேரமாக ஒரு விதமாகக் குறையலாயிற்று. ரயிலில் ஏறி உட்கார்ந்து விட்டால் அப்புறம் நம்மைக் கேட்பவர் யார் ?

ஆகவே, போர்ட்டரின் அறையை நோக்கி வண்டி எப்பொழுது வரும் என்று விசாரிப்பதற்காகப் போனேன். நான் கதவைத் தட்டுவதற்குள்ளாகவே தூரத்தில் வண்டி வருவது தெரிந்தது. கதவு தட்டும் சத்தத்தைக் கேட்ட போர்ட்டர் ஜன்னல் கதவைத் திறந்து தலையை வெளியே நீட்டினான். அதற்குள் அந்த அறைக்குள்ளிருந்து யாரோ உரத்த குரலில், ‘ ஏண்டி ! எங்கேயடி போய்த் தொலைந்தாய் ?'' என்று கடிந்து கொண்டது காதில் விழுந்தது.

என் இருதயத்தை மறுபடியும் குறைந்த அந்தச் சுமை வேதாளம் முருங்கை மரம் ஏறிய கதையாக அழுத்தலாயிற்று. உள்ளிருந்து அந்த ஆசாமி கோபம் மூண்ட கருநாகத்தைப் போல என்னையே பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். எனக்குப் பேய் அறைந்தாற் போல நிலைக்குத்தல் இட்டு விட்டது.

இந்தச் சந்தர்ப்பத்தில் ராவ்சாஹேப்பின் அதிகார தோரணையைக் கையாளாவிட்டால் காரியம் சாயாது என்று எனக்குத் தோன்றியது. ஆகவே, நான் வெகு மிடுக்காக, "அடே, மிஸ்டர்! நேற்று நீ வண்டியிலே தங்கிவிட்டாய், பாவம், உன் பெண்சாதி......" என்று ஆரம்பித்தேன்.

"டேய், மிஸ்டருக்கு மகனே! மரியாதையாகப் பேசடா!"—அந்த ஆசாமி என்னுடைய அதிகாரத்தை யெல்லாம் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. "நான் தான் வண்டியை உடனே நிறுத்திவிட்டு வந்து விட்டேனே, அப்பா! நீ என் பெண்சாதியை எங்கே அழைத்துக் கொண்டு போனாய், சொல்லு! நேற்றிரவு முழுவதும் இவளைத் தேடித் தேடி என் கால் கடுத்து விட்டது! எங்கேடா அழைத்துக்கொண்டு போனாய், சொல்லடா!" என்று மிகவும் கீழ்த்தரமான பாஷை யைக் கையாளத் தொடங்கி விட்டான்.

"டேய்! நாவை அடக்கிப் பேசு. என்னை யார் என்று எண்ணினாய்? 'டா!' போட்டுப் பேசுகிறாயே! உனக்கு உதை கிதை கேட்கிறதா?" என்று அதிகார மிடுக்குடன் அதட்டினேன்.

"உனக்கு மரியாதை வைத்து வேறு பேச வேண் டுமா? வெட்கம், மானம், சூடு, சொரணை உள்ளவ னாக இருந்தால் நீ ஊரான்......" என்று இன்னும் கீழே இறங்கி விட்டான் அவன்.

ஏன் அவனிடம் வாயைக் கொடுத்தோம் என்றாகி விட்டது. என் அதிகாரத்துக்கோ மிரட்டலுக்கோ ஒரு

பலனும் ஏற்படவில்லை. என்னுடன் யாராவது வில்லைச் சேவகனோ வேலைக்காரனோ இருந்தால் என் பதவியையும் அதிகாரத்தையும் பற்றி அவனுக்குத் தெரியச் செய்திருக்க முடியும். காசைக் கெட்டியாக முடிந்து கொள்ள முயன்ற நான்தான் என்னோடு யாரையும் அழைத்துப் போகவில்லையே! என்ன செய்வது? இருந்தாலும் நான்தான் இந்த இலாக்காவுக்கு ஸப்கலெக்டர் என்பதைச் சொல்லலாம் என்று எண்ணி வாயைத் திறந்தேன். அதற்குள் அவன் கைச்சட்டைகளை ஒதுக்கி விட்டுக் கொண்டு, முஷ்டியை மடக்கிக் கொண்டு குத்துவதற்காக என் அருகில் வந்துவிட்டான். அவனுக்குத் துணையாக அவனோடு இன்னொரு ஆஜானுபாகுவான ஆளும் வந்து சேர்ந்தான்.

எனக்கு இன்று நம்பாடு சட்டினிதான் என்று தோன்றிவிட்டது. நான் ஜில்லா கலெக்டராகவே இருந்தால்கூட என்னை யார் லட்சியம் செய்யப் போகிறார்கள்? எனக்கு உலகமே சுற்றியது.

நல்ல வேளையாக, அந்த மனிதன் என் அருகில் வருவதற்குள்ளாக ரெயில் பிளாட்பாரத்தில் வந்து நின்றுவிட்டது. பக்கத்திலிருந்த போர்ட்டர் கதவைத் திறந்து வைத்தான். நான் ஒரே தாவாகத் தாவி வண்டிக்குள்ளே போய்க் கதவை உட்புறமாகத் தாளிட்டுக் கொண்டேன். இரண்டாம் வகுப்புப் பெட்டியிலே உட்புறமாகத் தாழ்ப்பாள் போட்டுக் கொள்ளச் செளகரியம் செய்து வைத்தானே, அவனுடைய புத்தியை மெச்சிக் கொண்டும், எனக்கு ஜில்லா கலெக்டர் பதவி அளிக்கப் போகும் அதிர்ஷ்ட தேவதையை வாழ்த்தி வணங்

இக் கொண்டும் 'வண்டி எப்பொழுதடா புறப்படப் போகிறது ?' என்று காத்துக் கொண்டிருந்தேன். 'இருந் தாலும் கை நஷ்டம் நஷ்டந்தானே ? இரண்டாவது வகுப்புப் பெட்டியில் ஏறி உட்கார்ந்து விட்டாயே !' என்று என் உள்ளம் என்னை இடித்துக் காட்டிக் கொண்டிருந்தது.

'இது என்ன உலகமடா ? நன்மை செய்யப்போன வனுக்குத் தீமையா ? பிரிந்த மனைவியைச் சேர்த்து வைத்தேனே ! இதற்கு இதுதானா வெகுமதி !' என்று எண்ணிக் கொண்டிருக்கும்பொழுதே வண்டி புறப் பட்டு விட்டது ! "சீ ! நீயும் ஒரு மனிதன்மாதிரி !" என்று சற்று இரைந்தே சொல்லி விட்டு அந்தப் பெண் ணைக் கடைசியாக ஒரு முறை கண்ணாரப் பார்த்தேன்.

என் இடைக்கால 'மனைவி' ஸ்டேஷன் பிளாட் பாரத்திலேயே தங்கி விட்டாள்!

# அந்தரங்கக் காரியதரிசி

மேன்மை தங்கிய ஸர் மோகன்லால் அவர்கள் வியாபாரத் தலைநகரமான பம்பாயில் குறிப்பிடக் கூடிய மிகப் பெரும் புள்ளிகளில் முதன்மையானவர். அவருக்குச் சொந்தமாக எத்தனையோ பண்டகசாலைகள் இருந்தன. அவற்றுக்குக் கணக்கு வேண்டும் என்று விரும்பினுல், தூக்க முடியாத கனமான அவரது சாவிக் கொத்தைத் தான் கேட்க வேண்டும்.

அவர் மாபெரும் கம்பெனி ஒன்றின் பூரண உரிமையாளர். ஆறு கம்பெனிகளுக்கு மானேஜிங் ஏஜண்ட். முப்பத்தாறு கம்பெனிகளுக்கு டைரக்டர். இன்னும் எத்தனை எத்தனையோ கம்பெனிகளுக்குப் பங்குதாரர். இவற்றுக்கெல்லாம் ஒரு புள்ளி விவரம் தயாரிக்க வேண்டும் என்று வந்தால், என்னதான் கஜ கர்ணம் போட்டாலும் பிறர் உதவியின்றி அவரால் தனியாகத் தயாரிக்க முடியவே முடியாது.

எல்லாவற்றுக்கும் மேலாக, அவர் பொதுநல வாழ்விலும் பெரும் அக்கறை கொண்டிருந்தார். ராஜாங்க சபையிலிருந்து நகர பரிபாலன சபை வரை அவர் அங்கம் வகிக்காத சபை கிடையாது; உற்சாகத்துடன் பங்கு எடுத்துக் கொள்ளாத கூட்டங்கள் கிடையாது. அரசாங்க ஆதரவுள்ள கமிட்டிகளும் சரி, அரசாங்க ஆதரவற்ற கழகங்களும் சரி, அவர் பெயரின்றிச்

சோபித்ததில்லை; முன்னுக்கும் வந்ததில்லை. பிரஸி டென்ஸி அஸோஸியேஷன், ராடிகல் லீக், உலகச் சமாதானப் பிரியர் சங்கம், உலகப் போர் வெறியர் ஸ்தாபனம், சமூகச் சீர்திருத்தக் கழகம், வியாபார அபிவிருத்தி சங்கம், உள்நாட்டு வியாபாரிகள் சேம்பர், அயல்நாட்டு வியாபாரிகள் அஸோஸியேஷன், துணி, மணி, கரும்பு, வெல்லம், சர்க்கரை, கீரை, பருப்பு, கடலை முதலிய பொருள் விற்போர் பாதுகாப்புச் சங்கம், தக்ளி அபிவிருத்தி மன்றம், கைத்தறிக் கமிட்டி, மில் முதலாளிகள் க்ஷேம சங்கம், தொழிலாளர் அபிவிருத் திக் கழகம், ஒத்துழையாமைப் போர் வீரர் படை, ஒத்துழைப்புப் போர் வீரர் படை - இவைபோன்ற இன் னும் எத்தனை எத்தனையோ ஸ்தாபனங்களுக்கு அவர் தலைவர், உபதலைவர், காரியதரிசி, உப காரியதரிசி, கூட்டுக் காரியதரிசி, துணைக் காரியதரிசி, பொக்கிஷ தார், அங்கத்தினர், போஷகர், ஸ்தாபகர் என்று ஏதா வது ஒரு பதவி வகித்து வந்தார்.

அதோடு, தாம் எடுத்துக் கொண்ட பணியைக் குற்றங் குறையின்றித் திறம்பட நிர்வகிக்க வேண்டும் என்ற ஒரே நல்ல நோக்கத்துடன், அந்த அந்த விஷயங் களில் தேர்ச்சி அடைந்தவர்களாகத் தேர்ந்தெடுத்து ஒரு பெரும் பட்டாளத்துக்கே உத்தியோகம் போட்டுக் கொடுத்திருந்தார். அத்தனை பேருடைய அறிவையும் ஆற்றலையும் சாதுரியமாகப் பயன்படுத்திக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்குவதில் ஸர் மோகன்லாலுக்கு உள்ள திறமையை என்னவென்று புகழ்வது? அதன் பலனாக, அவரது பணமும் புகழும் காட்டாற்று வெள்ள மாகப் பெருகிக் கரைபுரண்டு ஓடலாயின.

சில காலமாக ஸர் மோகன்லாலுக்கு ஒரு பெருங் குறை. விலைமதிக்க முடியாத அவரது பொழுது, கால் காசுக்குப் பிரயோசனமில்லாத சின்னஞ் சிறு குடும்பக் காரியங்களில் வீணாகி வந்தது. அப்பப்பா; அதனால் எத்தனை காரியங்கள் ஈடேருமலே போய் விட்டன! கணக்கில் அடங்காத கல்யாணம், கார்த்திகைகள், மாப்பிள்ளை அழைப்புகள், இறுதி யாத்திரைகள் ஆகியவை அவர் கலந்து கொள்ள இயலாமற் போனமையினால் சோபிக்காமல் போய் விட்டன. அதுமட்டுமா? உற்றார்—உறவினர்களின் துயரங்களைத் துடைத்தெறியும் பெருமையையும் அவர் அடைய முடியாமல் போய் விட்டது. எத்தனையோ தேவைப்பட்டவர்கள் அவரிடம் பொருளுதவி நாடி வருவார்கள். அவர்களுக்குப் பொருளுதவி செய்வது முன்னே, பின்னே இருந்தாலும், தமது பெருமை உயரக்கூடிய வகையில் ஆறுதல் அளித்து நாலு வார்த்தைகள் எழுதக்கூட அவருக்கு நேரம் இல்லை. அவர் சமீபத்தில் புதுமணம் புரிந்து கொண்டிருந்த இளம் மனைவி உடல்நிலை–மனநிலை இரண்டும் சரியில்லாமல் பிரபல டாக்டர்களின் மேற் பார்வையில் டும்மஸ் என்னும் ஊரில் இருந்தாள். அவளது மனநிலையை ஒரு நிலைப்படுத்தி வைப்பதற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு ஒரு தடவையாவது ஸர் மோகன்லால் உணர்ச்சி நிறைந்த கடிதங்கள் எழுதி வந்தால் நலமா யிருக்கும் என்று டாக்டர்கள் ஆலோசனை கூறி யிருந்தார்கள். ஆனால் இக் காரியத்துக்குத் தான் எத்தனை இடையூறுகள்! இப்படிச் செய்ய முடியாமற் போகவே, தாம்பத்திய வாழ்க்கையின் உணர்ச்சி நிலைகளைப் பற்றி டாக்டர்களிடம் அவர்

எவ்வளவோ பெரிய பெரிய பேச்சுகளைக் கேட்கும்படி யாகி விட்டது. அதில் தமது பொன்னுன நேரத்தை அநாவசியமாக வீணுக்கும்படியும் ஆகி விட்டது!

இத்தகைய அவசியமான காரியங்களைக் காரியால யத்துச் சம்பளம்பெறும் சிப்பந்திகள் சரிவரச் செய்வ தில்லை. அதனுல் அவரது செயலாற்றும் திறமையில் கறை படியும் போலிருந்தது. அதற்கு அவர் இடம் கொடுக்க விரும்பவில்லை. ஒருநாள் இதற்கு ஒரு முடிவு கண்டே தீருவது என்ற முடிவுக்கு வந்தார். அதிர்ஷ்ட வசமாக அதற்கு ஒரு வழியும் தோன்றியது. மற்ற அலுவல்களைக் கவனிக்கத் தனித்தனி இலாக்காக் களும் காரியதரிசிகளும் ஏற்படுத்தி யிருந்ததுபோலவே, குடும்ப சம்பந்தமான அலுவல்களைக் கவனித்துக் கொள்வதற்கும் ஒரு தனி இலாக்கா ஏற்படுத்தி, அதற்கு ஒரு அந்தரங்கக் காரியதரிசியும் நியமித்து விடுவது என்று தீர்மானித்தார். அவரது அந்தத் தீர்மா னம் உடனடியாகப் பிரபல பத்திரிகைகளில் விளம்பர மாக வெளி வந்தது.

குறிப்பிட்ட தினத்தன்று குறிப்பிட்ட நேரத்தில், ஸர் மோகன்லால் மூலமாக நிர்மாணிக்கப்பட்ட உத்தி யோக சுயம்வர மண்டபத்தில், தன் கழுத்தில்தான் மாலை விழும் என்ற நம்பிக்கையுடன் பல விண்ணப்ப தாரர்கள் சாதக பட்சியாகக் குழுமி விட்டனர்.

அப்பொழுது ஸர் மோகன்லால் தமது விசாலமான அறையின் அரையே அரைக்கால் பகுதியை அடைத் துக் கொண்டிருக்கும் மேஜைக்கெதிரே அமர்ந்திருந் தார். அவர் எதிரே அன்றைய தினக் குறிப்பேடு திறந்து

கிடந்தது. 'மூன்று அடித்து முப்பத்தொன்பது நிமிஷத்துக்கு நகரபரிபாலன சபையின் விஷயாலோசனை கமிட்டிக் கூட்டம்' என்ற குறிப்பைக் கவனித்த அவரது பார்வை அதற்குமேலிருந்த குறிப்பிலும் அவரை யறியாமலே சென்றது. 'மூன்று அடித்துப் பதினைந்து நிமிஷத்துக்கு அந்தரங்கக் காரியதரிசியின் தேர்வு.' உடனே ஸர் மோகன்லால் மேஜையின்மீது வைத்திருந்த வெண்கலப் பூனையின் வாலை அழுத்தினர். கண கணவென்று மணி ஒலித்தது. அதைத் தொடர்ந்து அவரெதிரே வில்லைச் சேவகன் நின்ருன்.

" தலால் ஸேட்டை வரச் சொல்!"

ஸர் மோகன்லால் நிமிர்ந்து பாராமலே சொன்னர். வில்லைச் சேவகன் வெளியே சென்ருன். அதை அடுத்து நடுத்தர வயதுடைய ஒரு மனிதர் அவரெதிரே நின்ருர்.

"வேலைக்கு மனுப் போட்டிருக்கிறவர்கள் வந்திருக்கிருர்களா ?"

" ஆமாம்! வந்திருக்கிருர்கள் !"

" மொத்தம் எத்தனை பேர் ?"

" பதின்மூன்று பேர். "

" அதிர்ஷ்டக்கட்டை நம்பர். இருந்தாலும் பரவாயில்லை. ஒவ்வொருவராக உள்ளே அனுப்பு!" என்று கட்டளை யிட்டார் ஸர் மோகன்லால்.

" சரி, சார்!" என்று கூறித் தலால்ஸேட் அடுத்த கணமே அவ்வறையிலிருந்து வெளியே சென்ருர்.

மறு கணம் ஒரு பார்ஸி வாலிபன் உள்ளே நுழைந்தான். ஆள் வாட்டசாட்டமாக உயரமாக இருந்தான். அழகாகவும் இருந்தான். 'துறு துறு' என்ற குணம் படைத்தவனுகவும் தோன்றினுன். அவன் உடுத்தியிருந்த ஆடம்பர உடையும் ஆகிருதியும் துணிக்கடை விளம்பரத்தின் உருவம்தான் உயிர் பெற்றுவந்து விட்டதோ என்று எண்ணும்படி அமைந்திருந்தன. அவனது சுருண்ட தலைக் கேசங்களில் இரண்டொரு கொத்துக்கள் முன்நெற்றியில் வந்து விழுந்திருந்தன. பிரேம் இல்லாத கண்ணுடி அவன் முகத்தை அலங்கரித்துக் கொண்டிருந்தது. அவன் அணிந்திருந்த உடை மடிப்புக் கலையாமல் இருந்தது. சலவைக் கஞ்சியின் மொர மொரப்போடு தையற்காரனின் கைத்திறனும் அபூர்வம் என்பதை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது.

விறைப்பாக நின்ற அவனது உடல் இடுப்போடு சற்றுக் குனிந்து வணக்கம் தெரிவித்தது. உதடுகள் ஒரு புன்முறுவலைக் காட்டுவது போலக் காட்டி மறுபடியும் பழையபடியே குவிந்தன. வாலிபன் முன் நெற்றியில் புரண்ட தலைமயிரை ஒரு தடவை இடது கையினுல் ஒதுக்கிவிட்டுக் கொண்டான்.

ஸர் மோகன்லால் தலை நிமிர்ந்து அவனை ஒருமுறை பார்த்து விட்டுக் கேட்டார்:

"பெயர்?"

"பேஸி சுல்தான்!"

வாலிபன் சற்று நெருங்கி வந்தான்.

மனுக்கள் கட்டிலிருந்து அவன் மனுவை எடுத்தார் ஸர் மோகன்லால்.

"வயது?"

"இருபத்தெட்டு."

மனுவை ஒருபுறம் வைத்தார் ஸர் மோகன்லால்.

"சரி! உம்மை எடுத்துக் கொள்வதா யிருந்தால், நாளை உமக்குக் கடிதம் வரும்!" என்று கூறித் தமது கழுத்து அசைப்பினாலேயே அவனை வெளியே போகுமாறு உத்தரவிட்டார்.

சுல்தான் மூன்று நாட்களாகவே இந்த 'இண்டர்வியூ'வுக்காக விழுந்து விழுந்து தன்னைத் தயாரித்துக் கொண்டிருந்தான். எத்தனை எத்தனையோ கேள்விகளை எதிர்பார்த்துப் பதிலை உருப்போட்டு வைத்துக் கொண்டிருந்தான். பதில் சொல்லும் பொழுது எப்படி எப்படியெல்லாம் தன் உடல் உறுப்புகளுக்கு வேலைகொடுக்க வேண்டும் என்பதற்குப் பல ஒத்திகைகளும் பார்த்துக் கொண்டிருந்தான். அத்தனை முயற்சிகளும் ஒரு நொடியில் வீணாகிப் போய் விட்டன. ஸர் மோகன்லால் அவனுக்குத் தன் திறமையைக் காட்ட வாய்ப்பே அளிக்காமல் ஏமாற்றி விட்டார். இந்த எதிர்பாராத ஏமாற்றம் அவனைப் பேய் அறைந்தாற்போல் நிலைகுலைந்து நிற்கும்படி செய்து விட்டது.

தலை நிமிர்ந்த ஸர் மோகன்லால் "இன்னும் ஏன் நிற்கிறீர்?" என்றார் வெடிப்பாக. சுல்தான் வேறு வழியின்றி ஒன்றும் பேசத் தோன்றாமல் வெளியேறினான்.

உடனே ஒரு மராத்தியர் உள்ளே நுழைந்தார். அவர் அணிந்திருந்த சிவப்பு நிறத் தலைப்பாகையும், செருப்பும், அவர் பேஷ்வா காலத்தைச் சேர்ந்தவர் என்பதைச் சொல்லாமலே சொல்லிக் காட்டின. அவருக்கு வயது சற்று அதிகம். பரந்த அநுபவம் பெற்ற வர் என்பதை முகக்குறியே எடுத்துக் காட்டியது. நான்கைந்து கேள்விகள் கேட்டு ஸேட்ஜி அவருக்கும் விடை கொடுத்து அனுப்பினார். அடுத்தவர் வருவதற் குள்ளாக 'இவர் நம் காரியத்துக்குப் பயன்படுவாரோ?' என்று எண்ணிப் பார்க்க நினைத்தார்.

ஆனால் மூன்றாவதாக உள்ளே நுழைந்தவர், அவர் மூளைக்கு அந்தச் சிரமத்தை வைக்கவில்லை. வந்தவரின் முகத்தில் காம்பீர்யம் குடி கொண்டிருந்தது. நடையில் மத்தகஜத்தின் மெதுத்தன்மை மிளிர்ந்தது. விழிகளில் ஒரு ஒளியைக் காணோம். ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தி ருப்பவரைப் போன்று,—இல்லை, இல்லை, எதையோ பறி கொடுத்து விட்டவரைப் போன்று—உள்ளுக்குள் செரு கிக் கொண்டிருந்தன. இடுப்பு ஒடிந்து, நொடிந்ததைப் பார்க்கப் பார்க்கப் பார்த்துக்கொண்டே இருக்கவேண் டும்போலத் தோன்றியது.

ஸர் மோகன்லால் அதைக் கவனித்தார். அவரது நிலைத்த பார்வையில் ரகசியமே உருவான ஒரு இளநகை ஓடி மறைந்தது.

"உமது பெயர்?"—குஜராத்தி மொழியில் கேட் டார் ஸர் மோகன்லால்.

"மதுபர்க்க சங்கர சாஸ்திரி."

"எந்த ஊரோ ?"

இந்தக் கேள்வியைக் கேட்கும்பொழுது, கல்யாண காலத்தில் மதுபர்க்கம் அருந்துவது போன்ற சுவையை ஸர் மோகன்லாலின் நா சுவைத்தது.

"நடியாத்."

சாஸ்திரியின் நடை, உடை, பாவனையைக் கண்ணுற்ற ஸேட்ஜிக்கு ஒரு வேடிக்கை தோன்றியது. கேலியாக, "எழுதப் படிக்க வருமா ?" என்று கேட்டார்.

"எனது சிற்றறிவுக்கு எட்டிய வரையில் குஜராத்தி அன்னையின் பாதாரவிந்தங்களில், இப்படி எப்பொழுதாவது பத்ரம், புஷ்பம், பலம், தோயம், அதாவது இலை, பூ, பழம், நீர் என்ற வகையில் ஏதாவது அர்ப்பணித்து வந்திருக்கிறேன் !" என்றார் மதுபர்க்க சங்கரசாஸ்திரி. அதைச் சொல்லும்பொழுது அவர் குரலில் ஒரு காம்பீர்யமும் அதைத் தொடர்ந்து கர்வமும் தொனித்தன.

ஸர் மோகன்லாலின் சாந்தமான முகத்தில் மீண்டும் ஒருமுறை சிரிப்பு இழையோடியது. "சரி. உமக்கு என்ன சம்பளம் வேண்டும் ?" என்று கேட்டார்.

"பம்பாய் வாழ்க்கை..."

ஸர் மோகன்லால் கடிகாரத்தைப் பார்த்தவாறே, "உமக்குக் குழந்தை குட்டிகள் இருக்கின்றனவா ?" என்று கேட்டார்.

"இருக்கின்றன !" என்று சொன்ன மதுபர்க்க சாஸ்திரி ஏதோ யோசனையில் ஆழ்ந்தவர் போல், "ஆனால் தற்சமயம் பம்பாயில் இல்லை !" என்றார்.

"இருநூற்றைம்பது சம்பளம். என் வீட்டிலேயே இருப்பு; சாப்பாடு இரண்டும். சம்மதமா, சொல்லும்!" என்று தந்தி பாஷையில் சாஸ்திரியைப் பார்த்துக் கேட்டார் ஸர் மோகன்லால்.

சாஸ்திரியின் விழிகள் அகல விரிந்தன. "தங்கள் சித்தம் என் பாக்கியம்!" என்ருர்.

"இன்றைக்கே நீர் இங்கே வேலையை ஒப்புக் கொள்ளலாம் அல்லவா?"

"எனக்கு வேறு ஒன்றும் வேலை இல்லை!"

"அப்படியானுல் உட்காரும். இதோ உமது மேஜை!" என்ருர் ஸர் மோகன்லால்.

மதுபர்க்க சாஸ்திரிக்கு வாய்மொழியாகவே நியமனப் பத்திரம் வழங்கிவிட்டு, மின்சார யந்திரத்தைப் போன்ற வேகத்துடன் உத்தரவிடலானுர், மோகன் லால். "நான் இப்பொழுது வெளியேபோய்க் கொண்டிருக்கிறேன். ஐந்தேகால் மணிக்குத் திரும்பி வருவேன். இந்தாரும், கடிதம். இந்த ஆசாமிக்கு இருபத்தைந்து ரூபாய் அனுப்ப வேண்டும். பணம் அனுப்பியிருப்பதாக ஒரு கடிதமும் எழுதிவிடும். ஆள் கொஞ்சம் அகம்பாவி, தன்மானம் உள்ளவன். தர்மத்துக்காக நாம் அவனுக்குப் பணம் கொடுத்துக் கொண்டிருக்கிருேம் என்ற எண்ணம் விழக்கூடாது!"

ஸேட் இன்னுமொரு கடிதத்தை எடுத்தார்.

"இந்தாரும், இன்னொரு கடிதம். இது யாருடையது, தெரியுமா? மனோரமாவினுடையது!"

சாஸ்திரியின் விழிகள் வியப்பினால் பிதுங்கி வெளியே விழுந்துவிடும் போலாகி விட்டன.

"மனோரமா என் மனைவி. அவள் டும்மஸில் இருக்கிறாள். வியாதிக்காரி. அவள் மனத்துக்கு ஆறுதல் ஏற்படும் வகையில் ஒரு கடிதம் எழுதி வையுங்கள்!"

"என்னையா சொல்கிறீர்கள்?"

"ஆமாம்! இதில் என்ன தவறு? நான் வந்ததும் பார்த்து அனுப்புகிறேன்!"

ஸர் மோகன்லால் மணி அடித்து வேலைக்காரனைக் கூப்பிட்டார். அவன் வந்ததும், "இந்தப் பையைக் கொண்டுபோய்க் காரில் வை!" என்று உத்தரவிட்டார்.

தலால் ஸேட் மறுபடியும் உள்ளே வந்தார்.

"சார்!"

"இதோ பார்! மிஸ்டர் சாஸ்திரிக்கு இன்று முதல் மாதம் இருநூற்றைம்பது ரூபாய் சம்பளம். இவர் பெயரை எழுதிக்கொள். இவருக்கு இங்கேயே 'ஸீட்' போட்டுவிடு. மற்ற விண்ணப்பதாரர்களை நீயே ஒரு மாதிரியாகப் பார்த்து அனுப்பிவிடு!"

இவ்விதம் கூறியதும் ஸர் மோகன்லால் ஒருகணம் கூடத் தாமதிக்காமல் வெளியே புறப்பட்டு விட்டார்.

## 2

ஸர் மோகன்லால் வெளியே போய்விட்டார். ஆனால் மதுபர்க்க சங்கர சாஸ்திரி சித்திரப் பதுமையாக வாய் அடைத்துப்போய் ஸ்தம்பித்து நின்றார்.

இருநூற்றைம்பது ரூபாய் சம்பளம்; தங்க இடமும் உண்ண உணவும் இலவசம்; ஸேட்ஜீயின் உத்தரவு; அவர் மனைவிக்குக் கடிதம் எழுதவேண்டிய பொறுப்பு தம் தலையில் சார்ந்தது;—எல்லாமாகச் சேர்ந்து சாஸ்திரியின் மூளையைக் குழப்பி மனத்தைச் சஞ்சலத்தில் ஆழ்த்திவிட்டன.

தலால் ஸேட் சிரித்தவாறே அவரிடம் சில கேள்விகளைக் கேட்டார். ஆனால் சாஸ்திரி சரியான பதில் கொடுக்கவில்லை. சாஸ்திரி ஒருவேளை கர்வியோ என்னவோ என்று எண்ணித் தலால் ஸேட் அங்கிருந்து போய் விட்டார். சாஸ்திரியோ ஸேட்ஜியின் மனைவி எழுதிய கடிதத்தைக் கையில் வைத்துக்கொண்டு செய்வது அறியாது திகைத்தார்.

மதுபர்க்க சாஸ்திரியைச் சரியாகப் புரிந்து கொள்ளாதவர்களுக்கு இந்தப் புதிர் புரிவது சற்றுச் சிரம சாத்தியமான காரியம்தான்.

நடியாத்வாசியான மதுபர்க்க சங்கர சாஸ்திரி தம் முயற்சியில் படித்து முன்னுக்கு வந்தவர். அவருக்கு அசைக்க முடியாத ஒரு நம்பிக்கை. அதாவது, சிருஷ்டியின் இருதயஸ்தானம் குஜராத். அதன் நடுப்புள்ளி நடியாத். அதற்கு ஆதாரப் புள்ளி அவர். அதோடு அவருடைய இன்னொரு நம்பிக்கையும் என்னவென்றால், கோவர்த்தனராம் போன்ற நடியாத்தைச் சேர்ந்த புகழ் பெற்ற புலவர்களின் கீர்த்தி என்னும் மணிமகுடம் தமது தலையை அலங்கரிப்பதற்காகவே அவர்கள் தலையிலிருந்து கிடுகிடுவென்று கனவேகமாக ஆடத் தொடங்கிவிட்டது என்பதுதான்.

அவரைப் பொறுத்தவரை உலகம் நடியாதின் ஒரு தெரு; உலக இலக்கியம் அவரது கிராமத்தைச் சேர்ந்த புலவர்களின் வாயினின்று எழுந்த கர்ஜனையின் எதிரொலி. இவ்வளவே.

மதுபர்க்க சாஸ்திரிக்குத் தமது படிப்பிலும் நடியாத்தின் பெருமையிலும் எத்தனை பக்தி சிரத்தை இருந்ததோ, அத்தனை பக்தி சிரத்தை தமது மனைவியிடமும் இருந்தது. அவர் அவளைத் தமது வழிபடு தெய்வமாகவே மதித்து வந்தார். உலகத்துப் பெண் சிருஷ்டிகளுக்குள் குஜராத்திப் பெண்களின் அழகும் பண்பும் தான் எல்லாவற்றிலும் சிறந்தது என்பது அவர் அபிப்பிராயம். அந்தத் குஜராத்திப் பெண்களுக்குள்ளே தமது தர்ம பத்தினி ஒருத்திதான் கடந்தகால, நிகழ்கால, வருங்கால அழகிகளில் எல்லாம் தலை சிறந்தவள், குணக் களஞ்சியமானவள் என்பதும் அவரது அசைக்க முடியாத நம்பிக்கை.

அதனுல்தான் ஸர் மோகன்லால் தமது மனைவியின் கடிதத்தை அவரிடம் கொடுத்துப் பதில் எழுதுமாறு சொன்னபொழுது மதுபர்க்க சாஸ்திரி உடலும் உள்ளமும் ஒருங்கே குலுங்கத் துணுக்குற்ருர்.

இந்தப் பாவி உலகம் ஏன் இன்னும் பாதாளத்தில் அழுந்தாமல் கிடக்கிறது? இந்த உலகத்தில் இவ்வளவு மட்டரகமான கணவன்மார்கள்கூட இருக்கிருர்களா? அன்பே உருவான மலர் உள்ளம் படைத்த மனைவிமார்களுக்குக் காதல் கடிதம் எழுதச் சம்பளம் பெறும் சிப்பந்திகளை நியமிப்பதா? என்ன கண்ணராவி!

இன்றுவரை கேள்விப்படாத விஷயமாயிருக்கிறதே! அட, கடவுளே! மனிதன் இவ்வளவு கீழ்த்தரமாகவா போக வேண்டும்? பம்பாய் நகரத்தில் அதோகதி என்னும் ஆழமான குழியில் அழுந்திக் கிடக்கும் எத்தனையோ கேடுகெட்ட மனிதர்கள் இருக்கிறார்கள் என்று அவர் கேள்விப்பட்டிருக்கிறார். ஆனால் இந்தப் பணக்கார மனிதர் தம் அருமை மனைவிக்கு இழைக்கும் துரோகத்தைப் பார்க்கும்போது, அந்தக் கேட்டிலும் கேடுகெட்ட மனிதர்களைக்கூட நல்லவர்கள் என்று கூறி விடலாம் போலிருக்கிறதே!

எத்தனை அன்புடன், எத்தனை உற்சாகத்துடன், எத்தனை மென்மையான எண்ணத்துடன் அந்த மாமலராள் இவருக்குக் கடிதம் எழுதியிருக்கிறாளோ, யார் கண்டார்கள்? உணர்ச்சிக்குச் சற்றும் மதிப்புக் கொடாத இவரும் ஒரு மனிதரா? உண்மைக் கணவரா? மூன்றும் மனிதனைக் கொண்டு பதில் எழுதச் சொல்பவர் உணர்ச்சியே சிறிதும் அற்ற வெறும் கட்டையாகத்தான் இருக்கவேண்டும்; கருங்கல் நெஞ்சம் படைத்தவராகத்தான் இருக்கவேண்டும். மதுபர்க்க சங்கர சாஸ்திரியினால் அதற்குமேல் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை.

அவர் உள்ளம் தழுதழுத்து மெழுகாக உருகி விட்டது. துர்வாஸ முனிவர் எத்தகைய கனல் கக்கும் பார்வையுடன் பார்த்து மக்களைப் பஸ்மமாக்கி யிருப்பாரோ, அதே கோபம் கொண்ட விழிகளுடன் மதுபர்க்க சாஸ்திரி, பக்கத்திலிருந்த ஸர் மோகன் லாலின் மேஜையைப் பார்க்கலானார்.

மேஜையின்மேல் சென்ற அவர் பார்வை அதன் மேல் திறநது கிடந்த குறிப்பேட்டையும் ஒரு நோட்டம் விட்டது. அதிலிருந்து ஸர் மோகன்லால் சீக்கிரமே திரும்பி விடுவார் என்றும் தெரிய வந்தது. அதோடு இருநூற்றைம்பது ரூபாய், உணவு, ஜாகை வசதி ஆகியவை நினைவுக்கு வந்தன. கடமையை நிறைவேற்ருமல் இருப்பது தம்மீது எத்தனை பெரிய மாசைக் கற்பிக்கக் கூடும் என்பதும் நினைவுக்கு வரவே, அவசரம் அவசரமாகக் கடிதத்தை எடுத்துப் படிக்கலானுர்.

' அன்பே,

தங்கள் கடிதம் கிடைத்தது. என் உடல் நிலை வரவரக் குணமாகி வருகிறது. தாங்கள் எப்பொழுது என்னைப் பார்க்க வரப்போகிறீர்கள் ?

தங்கள்
மனோரமா.'

கடிதம் சிறியதுதான். கடுகு சிறுத்தாலும் காரம் போகாது என்றபடி இனிமை நிறைந்தல்லவா இருக்கிறது ! பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத அழகுள்ள எழுத்து ! அதோடு எழுதும் முறையிலும் உயர்ந்த பண்பு ! எல்லாவற்றுக்கும் மேலாக எழுதுபவருடைய பெயரிலும்தான் என்ன மனோரம்யம் !

பம்பாய்ப் பணக்காரர்கள் உலகத்தைப் பொருட்படுத்த மாட்டார்கள் என்பது வேலை பார்க்கும் ஊழியர்களுக்குத் தெரியும். ஆனால் அன்பே உருவான மனைவிமார்களையும் அப்படித்தான் நடத்துவார்கள் என்று தெரிந்திருக்க நியாயம் இல்லையல்லவா ? இதை நினைத்

துப் பார்க்கவே, மதுபர்க்க சங்கர சாஸ்திரிக்கு மனம் கூசியது; தலை பம்பரமாகச் சுற்றியது.

அவர் தம் மேஜைக்கெதிரே உட்கார்ந்து கொண்டார். வெற்றுக் காகிதத்தை எடுத்து வைத்துக் கொண்டு பதில் எழுதலானார். என்ன என்னவோ எழுதினார், அடித்தார், திருத்தினார், சேர்த்தார். அப்புறம் காகிதத்தையே கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டார். பிறகு புதிதாக இன்னொரு காகிதத்தை எடுத்து வைத்துக்கொண்டு மறுபடியும் எழுத முனைந்தார். இரண்டு தடவை பேனாவைக்கூட மாற்றினார். உணர்ச்சி நிறைந்த அவரது உள்ளத்தில் எண்ணங்களுக்குமேல் எண்ணங்கள் அலைமேல் அலையாக எழுந்து மோதலாயின.

கடைசியில் மதுபர்க்க சாஸ்திரியின் இயல்பான அறிவு அவரோடு ஒத்துழைக்க முன் வந்தது. ஸர் மோகன்லாலின் ரசிகத் தன்மையைக் காப்பாற்றிக் கடைத்தேற்றுவதற்காகவே கடவுளாகப் பார்த்துத் தம்மை அவரிடம் அனுப்பி யிருக்கிறார் என்ற முடிவுக்கு வந்தார். எந்த எந்த வித்துவான்களுக்கிடையே, தாம் முதல் ஸ்தானம் வகிக்கப் போவதாக அவர் கனவும் கற்பனையும் செய்து வந்தாரோ, அவர்களது பெருமைகளை யெல்லாம் மனத்துள் ஒன்று கூட்டி நிறுத்திக் கொண்டார். தமக்கு வெற்றி கட்டாயம் கிட்ட வேண்டும் என்ற ஆனைமுகனை வேண்டிக் கொண்டு, பிள்ளையார் சுழியையும் பலமாகப் போட்டார். பிறகுதான் காகிதத்தில் பேனாவை ஓட்டலானார்.

'அன்புள்ள மனோரமாவுக்கு,

உன் கடிதம். விஷயம் தெரிந்து கொண்டேன். எனது வாடிய மனம் மறுபடியும் மலர்ந்தது. என் அன்பே! நீ எப்பொழுது நோய்ப் படுக்கையிலிருந்து எழுந்திருப்பாய்? இரவு-பகல் எந்நேரமும் எனக்கு இதே சிந்தனைதான். உன்னைக் காண என் உள்ளம் எப்படித் துடிக்கிறது என்பது உனக்கு என்ன தெரியும்? இன்னும் சில தினங்களுக்குள்ளேயே வந்து என் உள்ளத்தின் நிலையைக் கட்டாயம் உன்னெதிரே விண்டு வைப்பேன்.

இப்படிக்கு,
உன்னைக் காணத் துடிக்கும்,
.........................'

மதுபர்க்க சங்கர சாஸ்திரி நூறு தடவை படித்து, திருத்தி இந்தக் காதற் கடிதத்தைத் தயாரித்தார். ஆனால் அவருக்கு ஒரே ஒரு சந்தேகம். வறண்ட இதயம் படைத்த ஸர் மோகன்லால் இந்தக் கடிதத்தில் கொட்டி யிருக்கும் மென்மலர் போன்ற உணர்ச்சிகளுக்கு ஒரு மதிப்பு வைப்பாரோ, மாட்டாரோ என்று! உணர்ச்சியை அவர் கசக்கி எறிந்து விட்டால்.........? உள்ளம் இதை எண்ணித் துடித்துக் கொண்டிருந்தது.

ஸர் மோகன்லால் கனிந்த தீயாக உள்ளே வந்தார். தலால் ஸேட்டைக் கூப்பிட்டு என்ன வெல்லாமோ உத்தரவிட்டார். வேறு சிலரைக் கூப்பிட்டுப் பல கடுமையான உத்தரவுகள் போட்டார். பிறகு மதுபர்க்க சாஸ்திரியின் பக்கம் திரும்பி, "சாஸ்திரி!" என்றார் அதிகார மிடுக்குடன், ஆணவம் தொனிக்க.

“ சார் !”

“ டும்மஸுக்குப் போக வேண்டிய கடிதம் எழுதி யாகி விட்டதா ?”

“ தயாரா யிருக்கிறது, சார் !”

“ சரி, அதோ குஜராத்தி டைப்ரைட்டர் இருக்கிறது, பாரும் ! அதில் டைப் அடித்து அனுப்பிவிடும். என் கையெழுத்தையும் டைப் செய்தே அனுப்பிவிடும். மாலையில் என் கார் வரும். அதில் உமது பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டு பாலகேசுவரத்துக்கு வந்து சேரும் !”

இந்தச் சொற்களின் பொருள் சாஸ்திரிக்கு விளங்குவதற்கு முன்னாலேயே ஸர் மோகன்லால் அறையிலிருந்து வெளியேறி விட்டார். அவரது உத்தரவின் பொருள் விளங்கிய பொழுது மதுபர்க்க சங்கர சாஸ்திரிக்கு அவர்மேல் உண்டான ஆத்திரத்தையும் எரிச்சலையும் கணக்கிட்டுச் சொல்லி முடியாது.

3

மதுபர்க்க சங்கர சாஸ்திரி தங்குவதற்கென்று ஸர் மோகன்லாலின் கடற்கரை மாளிகையிலே ஒரு பகுதி ஒதுக்கப்பட்டது. அங்கிருந்தவண்ணமே அவர் எழும்பி விழும் கடலலைகளின் இனிய இசை ஒலியைக் கேட்க முடிந்தது ; குதித்தெழும் அலைகளின் விளையாட்டைக் காண முடிந்தது. புறக் காட்சியைக் கண்டு ஆனந்திக்கும் அதே வேளையில் அவரது அகத்திலும் அதே நிகழ்ச்சிகள் நிகழத் தொடங்கி விட்டன. என்ன என்னவோ எண்ணங்கள் ‘நான் முந்தி, நீ முந்தி’ என்று

போட்டி போட்டுக் கொண்டு ஒன்றை ஒன்று முந்திக் கொண்டு அவரது உள்ளத்தில் எழலாயின.

மனோரமாவுக்கு வயது இருபது இருக்கலாம். அவள் ஸர் மோகன்லாலுக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் பட்டவள். நோய்வாய்ப்பட்டு விட்டது காரணமாக அவள் கடந்த ஓராண்டாக டும்மஸில் வசித்து வந்தாள். என்ன வியாதி, ஏது வியாதி என்பது யாருக்குமே சரிவரத் தெரியாது. வேலைக்காரர்கள் கூட அது சம்பந்தமாக உரக்கப் பேச முடியாமல் தடை விதிக்கப்பட்டிருந்தனர். அதோடு சிறிது காலமாக ஸர் மோகன்லாலின் முதல் மனைவியின் மகன் பிருந்தாவனனும் தன் சிற்றன்னைக்குக் காவலாக அங்கேயே இருக்கலானான்.

மாலையில் பாலகேசுவரத்துக்கு வந்த மதுபர்க்க சாஸ்திரி சுருக்கமாக இவ்விவரங்களைத் தெரிந்து கொண்டார். தமது அறையில் போய் உட்கார்ந்து கொண்ட அவர் கடல் அலைகளின் சேஷ்டைகளைக் கண்டு களிப்பதில் ஈடுபட்டார். அப்பொழுது அவரது கற்பனைக் குதிரையும் கட்டுத் தெறித்துக் கொண்டு ஓடத் தொடங்கி விட்டது.

ஸர் மோகன்லாலின் மனைவி எழிலரசியாகவும் ரசிக உள்ளம் படைத்தவளாகவும் இருக்க வேண்டும். இவ்விஷயத்தில் மதுபர்க்க சாஸ்திரிக்குச் சம்சயமே உண்டாகவில்லை. ஆனால் ஸர் மோகன்லாலோ வறட்சியே உருவானராகவும், சிறிதும் ரஸிகத் தன்மையே அற்றவராகவும், பெண்ணின் உள்ளம் புரியாதவராகவும்தான் அவர் கண்களுக்குத் தோற்றம் அளித்தார்.

அவள் எத்தகைய எழிலரசியாக இருப்பாள்? இந்தக் கேள்வி மனத்தில் எழுந்ததுதான் தாமதம்; மகாகவி காளிதாஸரின் சுலோகம் ஒன்றை அவர் உதடுகள் முணுமுணுத்தன. கண்கள் அதை ஓவியமாகத் தீட்டி, மனோரமாவை அதில் ஆவாகனம்செய்து, கண்டு களித்தன. கண்களை மூடினாலும் அவள் மதிமுகம்; கண்களைத் திறந்தாலும் அவள் மதிமுகம். இந்த இன்ப போதையிலே நினைவிழந்து அவர் எப்பொழுது தூங்கினாரோ, அவருக்கே தெரியாது!

ஆமாம், அவர் கடிதம் எழுதினாரே, என்ன ஆகும்? அங்கிருந்து என்ன பதில் வரும்? அதைப் படித்துவிட்டு ஸர் மோகன்லால் என்ன சொல்வார்? கடவுளே! அவர் எழுதிய கடிதத்துக்கு வரும் பதில் கடிதம், அவர் வேலைக்கு உலை வைக்கக் கூடியதாக வந்து முடியக் கூடாதே!

இதே சிந்தனைதான் இரவு பகல் எந்நேரமும். ஒருவிதமாக மூன்று நாட்கள் ஓடி மறைந்தன. கடிதமும் வந்து சேர்ந்தது. ஸர் மோகன்லால் அந்தக் கடிதத்தைத் திறந்து பார்க்காமலே மதுபர்க்க சாஸ்திரியின் மேஜை மீது வைத்தார். "சாஸ்திரி! இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு இன்றைக்கே பதில் எழுதி விடுங்கள். தாமதிக்க வேண்டாம்!" என்றும் கட்டளையிட்டார்.

சாஸ்திரிக்கு உயிர் வந்தது. அதோடு அடங்கியிருந்த ஆத்திரமும் கோபமும் கூடவே வந்தன. ஸர் மோகன்லால் மீது ஏற்பட்ட வெறுப்பு உணர்ச்சி கடுங் கோடையின் உஷ்ணமானிபோல் ஏறியது. இவரும்

ஒரு மனிதரா? என்ன அரக்க குணம்! ஒருவேளை ஆண்டவன் இவருக்கு இருதயத்தை வைக்கவே மறந்து விட்டாரோ? இல்லாவிட்டால் இப்படி உணர்ச்சியற்ற பிண்டமாயிருக்கக் காரணம்?

ஸர் மோகன்லால் வெளியே சென்றதும் சாஸ்திரி கடிதத்தைப் பிரித்தார்:

'அன்பே!

தங்கள் கடிதம் கிடைத்தது. உள்ளத்து உணர்ச்சியை வெள்ளமாகக் கொட்டியிருப்பதைக் காண எந்தப் பெண்தான் விரும்பமாட்டாள்? என் இந்தக் கடிதம் உங்கள் உள்ளத்து வேதனையை அதிகப்படுத்தி விடாமல் இருக்க வேண்டுமே என்பதுதான் என் கவலை. இத்தனை பெரிய வர்த்தகத் துறையில் உழன்று கொண்டிருந்த பொழுதிலும், தாங்கள் அடியாளை மறக்கவில்லை என்பதைக் காணும்பொழுது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியே உண்டாகிறது. தாங்கள் எப்பொழுது வந்து தரிசனம் தந்து என்னை ஆட்கொள்ளப் போகிறீர்கள்? அடியாள் இதை அறியலாமா?

இப்படிக்கு,
தங்கள் பிரிவால் வாடும்
மனோரமா'

மதுபர்க்க சங்கர சாஸ்திரியின் சின்னஞ் சிறு விழிகளில் வெற்றியின் ஒளி பளிச்சிட்டது. அவர் நினைத்தது சரியாகி விட்டது; மனோரமாவைப் பற்றிக் கட்டிய முடிவு முற்றிலும் உண்மையாகி விட்டது. அவர் நினைத்தது போல் அவள் தீர்ந்த ரசிகை, உணர்ச்சிக்கு ஒரு

மதிப்புக் கொடுப்பவள் என்பதும் தெள்ளென விளங்கி விட்டது. ஆனால் அவளது அதிர்ஷ்டத்தை என்ன வென்பது? ரசிகத் தன்மை என்றால் என்னவென்றே அறியாத உணர்ச்சியற்ற ஒரு ஜடத்தின் கையில் சிக்கி அல்லலுற்று அவதியுற்று மனம் வெதும்பிச் சாக வேண்டும் என்றல்லவா அவள் தலையில் எழுதியிருக்கிறது!... ஆனால், நல்ல வேளை! ஆண்டவனைப் பார்த்து, வாடி வதங்கும் அப்பூங்கொடிக்கு உயிர் ஊட்டுவதற் காகவே, சரியான தருணத்தில் அவரை அனுப்பிவைத் திருக்கிறார். இல்லாவிட்டால் என்ன ஆகும்? நினைக் கவே அவருக்கு மனம் கூசியது.

உலகத்தின் துயரைத் துடைப்பதற்காகத்தானே ஏசுநாதர் சிலுவையில் ஏறினார்? அப்புறம்தானே அவர் மனத்துக்கும் ஒரு நிம்மதி உண்டாயிற்று? இந்த நினைவு மதுபர்க்க சாஸ்திரியின் நினைவில் எழுந்தது. சின்னஞ் சிறு சாத்வீகமான நற்பணிக்காகக் கூடப் பெரும் தியா கங்கள் புரியச் சித்தமா யிருக்கவேண்டும் என்ற சாணக்கிய நீதியை எண்ணி மனத்தைத் திடம் செய்து கொண்டார். பிறகு நடியாத்தைச் சேர்ந்த பிரபல இலக்கியப் பிரும்மாக்களை மனத்துள் வணங்கி விட்டுப் பதில் எழுதுவதற்காகப் பேனாவைக் கையில் எடுத்தார்.

'ஆருயிரே!

உன் கடிதம் கண்டேன்; ஆனந்தம் கொண்டேன். கடிதமா அது? வர்த்தகத் துறையின் தொல்லைகளில் சிக்குண்டு தவிக்கும் ஒரே காரணத்தினால், உன்னைப் போன்ற ரத்தினத்தைப் பரீட்சிக்காமலே போட்டுவிட் டேன். இப்போதுதான் தெரிகிறது, ஈடு இணையற்ற

இன்பத்தை இத்தனை நாளும் அநுபவிக்காமலே இருந்து விட்டோமே என்று! இனி வருந்தி என்ன பயன்? அந்த வருத்தத்தைக் கடிதத்தில்தான் வடிக்க முடியுமா? பொறுமையே பூஷணமான உன் குணம்தான் எனக்கு ஆறுதல் அளித்து மனச் சஞ்சலத்தை நீக்கி ஒரு நம்பிக்கையை ஊட்டுகிறது.

இன்னும் சில தினங்கள் பொறுத்துக் கொள். நான் கட்டாயம் உன்னை வந்து காண்பேன். அப்புறம் நாம் இருவரும் இணைந்தே வாழ்வோம். காதற் பொய்கையில் ஆனந்த நீராடுவோம், களிநடம் புரிவோம். என் பேச்சைப் பரிபூரணமாக நம்பு.

பிரிவு என்பது ஓர் புதுமைப் பாலம்–அதைப்
பேணி நிற்கும் ஆசைக் கட்டைகள் ஏராளம்
பனிமலர் பெய்திடும் பால்நிலவாம்–அதில்
பிரேமையை வளர்த்திடுமாம் அந்தப் பாலம்.

உன் அன்புள்ள,
மோகன்'

இந்தக் கடிதத்தை அனுப்பிய பின் மதுபர்க்க சாஸ்திரியின் மனம் ஒரு நிலையில் இல்லை. எத்தனையோ சிந்தனைகளுக்கு உள்ளாகி அவரையும் வாட்டி எடுத்தது. உட்காரும் பொழுதும் எழுந்திருக்கும் பொழுதும், தூங்கும் பொழுதும் விழித்துக் கொள்ளும் பொழுதும் அவருக்கு மனோரமாவின் நினைவேதான். அந்த நினைவில் பிறர் நலம் பேணிக் காக்கும் நன் நோக்கம் மேலோங்கியிருந்ததே ஒழியத் தன்னல நோக்கம் சிறிதும் இல்லை.

மூன்றுவது நாள் மறுபடியும் பதில் வந்தது.

'அன்பே!

கடிதம் கிடைத்தது. நான் சுகமாக இருக்கிறேன். அநேகம் தடவைகள் நான் தங்கள் கடிதத்தைப் படித்தேன். படிக்கப் படிக்கத் தெவிட்டவில்லை. சாதகப் பட்சிக்குச் சுவாதி நீர் கிடைத்தது போன்ற இன்பத்தைப் பெற்றேன். தங்கள் சொற்களில் மண்டிக் கிடக்கும் இனிமையும் உணர்ச்சியின் தூய வேகமும் என்னை மதிகிறங்க வைத்து விட்டன. சுத்தமான சாத்வீக அன்புக்காக ஏங்கி நிற்கும் இந்த அடியாளை இத்தனை நாட்களும் ஏன்தான் இப்படிச் சோதித்தீர்களோ, புரியவில்லை! சரி, ஏதோ நடந்தது நடந்து விட்டது. இனி மேலாவது சோதிக்காமல் இருப்பது உங்கள் கையில் இருக்கிறது.

என் அன்பே! அரும்பே! கட்டிக் கரும்பே! நாம் எப்பொழுது நேரில் சந்திப்போம்? கடிதத்தின் வறட்டுச் சொற்களைப் படிப்பதைக் காட்டிலும், நேர்முகமாக உங்கள் இனிய சொற்களையே கேட்க ஆசை கொள்கிறேன். அந்த அரிய வாய்ப்பை எப்பொழுது அளிக்க உத்தேசித்துள்ளீர்கள்?

பொறுமை இழந்து தவிதது உருகும்
மனோரமா'

இதைப் படித்தவுடன் மதுபர்க்க சங்கர சாஸ்திரியின் உள்ளத்தில் ஆனந்தப் புயலே உருவாகிவிட்டது. பதினைந்து நிமிஷ நேரத்துக்கு அவரது அபிப்பிராயங்களே ஆட்டம் கொடுத்து விடடன. உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த சிந்தனைச் சுடர் லபக்கென்று அணைந்துவிட்டது. இன்ப வாரிதியின் சல

சலப்புமட்டும் சிறிது நேரம் அவரது நரம்புகளுக்குள்ளே கேட்டுக் கொண்டிருந்தது. அவர் வைத்த கண் வாங் காமல் கடிதத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் நாவில் மனோரமாவின் பெயர் நடனமாடியது.

புயலின் வேகம் சற்றுத் தணியவே, அவரது உள் ளத்தில் என்ன என்னவோ எண்ண அலைகள் ஒன்றை ஒன்று அடித்து அழித்துக்கொண்டு எழ லாயின. இந்தக் கடிதப் போக்குவரத்தின் விஷயம் ஸர் மோகன்லாலுக்குத் தெரிந்துவிட்டால்...? அவரது உத்தியோகத்துக்கே ஆபத்து நேர்ந்து விட்டால்...? இதுபோன்ற எத்தனையோ 'விட்டால்?' கேள்விகள் அவர் மண்டையைத் துளைத்துவிட்டன. அதோடு இன் னொரு கேள்வியும் அவர் மனத்தைக் குடைந்தது.

'பிறர் மனைவியுடன் இதுபோன்ற கடிதப்போக்கு வரத்து நடத்துவது உசிதமாகுமா?''

விடை காண முடியாத இந்தக் கேள்வி அவரை வெகு நேரம் திக்குமுக்காட வைத்துவிட்டது. கடைசி யில் கடிதம் எழுதும் நேரம் வந்துவிடவே, எல்லாக் கேள்விகளையும் ஒரே அமுக்காக அமுக்கிவிட்டுக் கடமை உணர்ச்சி மேலிட்டு நின்றது. 'நாம் நமக் காகவா எழுதுகிறோம்? நம் உள்ளத்தில் தீய நோக்கத் துக்குச் சிறிதும் இடம் இல்லை. ஸர் மோகன்லாலிடம் ஊதியம் பெறும் ஊழியன் நாம். அவர் சொல்வதைக் கேட்க வேண்டியது நம் கடமை. கடமையைச் செய் யும்பொழுது தவறு எங்கிருந்து வந்தது?' இவ்வாறு தமது மனத்தைப் பலமுறை சமாதானப்படுத்திக் கொண்டு அவர் கடமையிலே கண்ணானார்.

பம்பாய்க்கும் டும்மஸுக்குமிடையே இனிய காதற் கடிதங்கள் வளர்ந்தன; அன்புப் பரிவர்த்தனை அமோகமாக நடந்தது. மதுபர்க்க சாஸ்திரி ஏழாவது வானத்திலே மிதக்கத் தொடங்கி விட்டார். காலையில் எழுந்ததும் அவர் வந்த கடிதங்களைப் பாராயணம் செய் வார். பகல் வேளைகளில் அவற்றைச் சட்டைப் பையில் வைத்துக்கொண்டு தமது ஞாபக சக்தியை வளர்ப்ப தில் முனைவார். மாலை வேளைகளில் மறுபடியும் ஒரு முறை பாராயணம் செய்துவிட்டு இரவு வேளைகளில் அரைகுறைக் கனவில் அவற்றையே உருப்போட்டு உரக்கப் படிப்பார்.

மதுபர்க்க சாஸ்திரிக்குத் தமது கடமை உணர்ச்சி யில் அசைக்க முடியாத ஒரு நம்பிக்கை இருந்தது. அந்த நம்பிக்கைக்கு வெற்றி கிட்டுவதாகத் தோன்றவே, அவரது உள்ளம் ஆனந்த நர்த்தனம் புரியத் தொடங்கி விட்டது. கல் அணை உடைத்துக் கொண்டு விட்டால் நீர்ப்பிரவாகம் வெகு வேகமாகப் பீறிக்கொண்டு வெளி வருகிறதல்லவா? அதேபோல் ஸர் மோகன்லாலின் வறட்சி மனப்பான்மையெல்லாம் இருந்த இடம் தெரி யாமல் மறைந்துவிட்டது என்ற எண்ணம் ஏற்படவே, மனோரமாவின் உள்ளமும் எழுதுகோலும் ஒருங்கே சேர்ந்து நாற்புறங்களையும் இனிமையும் பசுமையும் தோய்ந்தனவாகச் செய்துவிட்டன என்றே எண்ணினார் மதுபர்க்க சங்கர சாஸ்திரி.

ஒரு சாதாரண குஜராத்திப் பெண்மணி வெகு அழகாகவும் பண்பு தோயவும் காதற் கடிதங்கள் எழுதுவதில் கைகாரியாக இருக்கிறாள் என்பதை எண்

ணியபொழுது, இலக்கிய உள்ளம் படைத்த மதுபர்க்க சங்கர சாஸ்திரியின் கண்கள் ஆனந்தக் கண்ணீரையே சொரியலாயின. அதோடு அவளது கடைசிக் கடிதம் எல்லாவற்றையும் தூக்கியடிக்கக் கூடியதாக உயர்ந்த முறையில் அமைந்து விட்டது.

'உள்ளத்தைக் கொள்ளை கொண்ட மோகன்,

தங்கள் பிரிவால் வாடும் இந்த மனோரமாவின் வணக்கங்களை ஏற்றுக் கொள்ளுங்கள். என் ஒவ்வொரு மயிர்க்காலும் உங்கள் பெயரையே நாமஸ்மரணைசெய்து கொண்டிருக்கின்றன. இலக்கிய வல்லுநர்களது குரலோடு குரல் சேர்ந்து என் உள்ளமும் ஒத்துப் பாடிக் கொண்டிருக்கிறது.

தடாகத்தில் மலர்ந்திருக்கும் தாமரையைத்
தவிக்கவிட்டுப் பறந்துசெல்லும் வண்டுபோல
கானகத்தில் கதறி அழும் கோபியர்களைக்
கலங்கவைப்பது ஞாயமா, கண்ணா ஞாயமா?

என் உள்ளம் உருப்போடும் இந்த ஆசை எப்பொழுது நிறைவேறும்? உள்ளத்துப் புயல் எப்பொழுது ஓயும்? அடுத்த சனிக்கிழமை வருவதாகத் தாங்கள் வாக்களித்துள்ளீர்கள். கட்டாயம் வருவீர்கள் அல்லவா? என் மனம் பொறுமை இழக்கிறது. நீங்கள் வராவிட்டால் நானே நேரில் வந்து விடுவேன்.

பொறுமை இழந்துவிட்ட
மனோரமா'

இந்தக் கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்த பொழுது மதுபர்க்க சங்கர சாஸ்திரியின் கையிலிருந்த

உறையிலிருந்து இன்னொரு காகிதம் கீழே விழுந்து காற்றில் சலசலத்தது. அதில் எழுதியிருந்தது :

'வாடத் தொடங்கிவிட்ட என் உள்ளப் பூங்கா வுக்குப் புத்துயிர் ஊட்ட முற்பட்டிருக்கும் ரசிக சிகா மணியான தோட்டக் கலைஞரே! நீங்கள் எத்தனை நாட் கள்தான் என் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் மறைமுக மனமோகனாக இருக்கத் திட்டமிட்டிருக் கிறீர்கள்? போதும், இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டு. அடுத்த சனிக்கிழமை யன்று உள்ளத்தோடு உள்ளம் ஒட்டவும், கண்ணோடு கண் நோக்கவும் வேண்டும்; நம்மிருவருக்கும் இடையே நெருங்கிய அறிமுகமும் கிட்ட வேண்டும். அதற்கான வழிவகை கோலுங்கள். நான் நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு, முதல் மாடியில் உள்ள என் அறையில் உங்கள் பெயரை உருப்போட் டுக் கொண்டே உங்களுக்காக வழிமேல் விழிவைத்த வாறு காத்திருப்பேன், காத்திருப்பேன்.''

இந்தக் கடிதத்தைப் படித்ததும் மதுபர்க்க சாஸ் திரிக்குத் தலை சுற்றியது. நஞ்சுள்ள நாகத்தைக் காலால் மிதித்து விட்டது போன்ற உணர்ச்சியில் ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்தார். ஆனால் அடுத்த கணம் அதற்கு நேர்மாறான நிலையை அடைந்தார். பழைய ஓட்டைக் குடிசை, ரத்தினம் பதித்த மாளிகையாகக் காட்சி அளித்தபொழுது அலாவுத்தீனுக்கு என்ன உணர்ச்சி உண்டாகியிருக்குமோ, அதுவே அவர் உள்ளத்தை நிறைத்தது. இனிமை நிறைந்த இத்தனை இன்பக் கடிதங்களும் ஸர் மோகன்லாலுக்காகவா எழுதப்பட் டன? அவரைக் காண்பதற்காகவா அத்தனை துடிதுடிப்

பும் பரபரப்பும் அக்கடிதத்தில் தொனித்தன ? ஆவல் உந்த அந்தத் தாமரையாள் மகரந்தத்தை நாடி வரும் மலர் வண்டுக்கல்லவா அந்த அழைப்பை விடுத்திருந்தாள் ! இந்த எண்ணம் உதித்ததும், உடலோடு அவர் உள்ளமும் ஆனந்தக் கூத்தாடத் தொடங்கி விட்டது.

ஆனால் மதுபர்க்க சாஸ்திரி நல்ல அறிவாளி, சாமர்த்தியசாலியும்கூட. தமக்கும் மனோரமாவுக்கும் ஏற்பட்டுள்ள இந்த உறவு ஒரு புதிய பயங்கர உருவம் தரித்துக் கொண்டுவிடக் கூடாதே என்ற கவலையும் அவருக்கு இல்லாமல் இல்லை. எனவே, ஸர் மோகன்லாலின் மனைவியோடு தாம் தனித்துத் தெரியாமல் சந்திக்கலாமா, கூடாதா என்ற கேள்விஅவர் உள்ளத்தில் எழுந்தது. அதைத் தொடர்ந்தாற்போல் நடியாத் கிராமத்தில் கிணற்றிலிருந்து தண்ணீர் மொண்டு செல்லும் இல்லக்கிழத்தி கண்ணெதிரே வந்து நின்றாள்.

ஒரு புறம் ரசனை நிறைந்த காதலன் கிடைக்காமையினால் உருகி உருகிச் சாகும் பம்பாய் அழகி; இன்னொரு புறம் கணவனே கதி, அவனே தெய்வம் என்றிருக்கும் கிராமப் பெண். ஒரு புறம் காவியம், ரசனைத் திறன்; ஈடு இணையற்ற ஆத்மானந்தம். இன்னொரு புறம் கற்பு நிலையின் பெருமை, நன்மை தீமைகளை ஆய்ந்தறியும் விவேகம்; வருங்காலச் சந்ததிகள்மீது மாசுபடியுமோ என்ற பயம். இப்படியாக ஒன்றை ஒன்று போட்டி போட்டுக்கொண்டு அவர் கண்ணெதிரே வந்து நின்றன.

ஆனால் மனோரமா களங்கமே சிறிதும் அற்றவளாக ஏன் இருக்கக்கூடாது என்ற எண்ணமும் எழுந்தது.

ரசிக உள்ளத்தின் ஊற்றுப் பெருக்கு வறண்டுவிடக் கூடாது என்பதற்காகவே அவள் ஒரு ரசிக சிரோமணி யைக் காண விரும்பி யிருக்கலாம் அல்லவா ? இதில் என்ன தவறு ? பாவம்தான் ஏது ?

அதுமட்டும் அல்ல ; மதுபர்க்க சாஸ்திரியின் உள்ளங்கூடத்தான் சுத்தமாகவும் சாத்விகமானதாக வும் இருந்தது. அவருக்கு ஒரு பற்றுதலும் கிடையாது. பலன் ஏதும் விரும்பாமலே கர்மயோகத்தில் ஈடுபடத் தயாராயிருந்தார். மனோரமாவைச் சந்தித்து அவர் இரண்டொரு வார்த்தைகள் பேசுவாரானால், மனோரமா வுக்கும் நன்மை ஏற்படும் ; அவர் மனத்துக்கும் அமைதி கிட்டும். இதில் அவர் தமது சகதர்மிணிக்கு என்ன துரோகம் செய்யப்போகிறார் ? அவர் தம் சகதர்மிணி யைச் சேர்ந்தவர்தான் ; என்றென்றும் சேர்ந்தவராகவே இருக்கப் போகிறவர்தாம்.

இத்தகைய எண்ணப் போராட்டங்களுக்குப் பிறகு, அவரது தளர்ந்த மனம் உறுதிப்பட்டது. இதே சமயம் ஸர் மோகன்லாலும் “ சாஸ்திரி ! நாளை மறு நாள் சனிக்கிழமை நீங்களும் என்னோடு டும்மஸுக்கு வரவேண்டி யிருக்கும் !” என்று சொல்லிப்போனார்.

## 4

சனிக்கிழமை அன்று மதுபர்க்க சங்கர சாஸ்திரி போட்ட திட்டப்படி குறித்த நேரத்துக்கு ஸர் மோகன் லாலுடன் டும்மஸை அடைந்தார்.

அவர், மாளிகையின் வாசலிலேயே படைப்புக் கடவுளின் அற்புத சிருஷ்டியான புதிர்ப் பெண்ணைக்

காணப்போகிறோம் என்று எண்ணியிருந்தார். ஆனால் அவளுக்குப் பதிலாக ஸர் மோகன்லாலின் முதல் மனைவியின் மகனை பிருந்தாவனனைத்தான் அவர் காண முடிந்தது.

அவருக்குக் கீழ்த் தளத்திலேயே மாடிக்குப் பக்கத்திலேயே ஒரு அறை ஒழித்துக் கொடுக்கப்பட்டது. முதல் மாடியில் ஒருபுறம் மனோரமாவின் அறை யிருந்தது. மறுபுறம் நர்ஸின் அறை இருந்தது. ஸர் மோகன் லாலும் பிருந்தாவனனும் இரண்டாவது மாடியில் தூங்குவதாகத் திட்டம்.

பேச்சு வாக்கில், உடல் நிலை சரியில்லாததனால் மனோரமா தன் அறையிலிருந்து வெளியே வரவேயில்லை என்றும், அன்று இரவு நர்ஸ் தன் சொந்த வேலையாகச் சூரத்துக்குப் போகப்போகிறாள் என்பதும் சாஸ்திரிக்குத் தெரியவந்தன. சூழ்நிலை தமக்குச் சாதகமாக அமைவதைக் கண்டு மதுபர்க்க சங்கர சாஸ்திரிக்கு ஆனந்தம் நிலைகொள்ளவில்லை. யார் என்ன பேசுகிறார்கள் என்பதைக்கூட அவர் காதுகளில் சிறிதும் வாங்கிக் கொள்ளவில்லை.

மணி ஒன்பது அடிக்கவில்லை. அதற்குள்ளாக மதுபர்க்க சாஸ்திரி நிமிஷங்களை எண்ண ஆரம்பித்து விட்டார். நேரம் நெருங்க நெருங்க அவர் உள்ளத் துடிப்பு அடங்கி ஒடுங்கலாயிற்று.

ஆனால் அவரது ரசிகத்தன்மை படைத்த உள்ளம் அவரைத் தூங்கவும் விடவில்லை; சும்மா ஓய்ந்திருக்கவும் விடவில்லை. மனோரமாவைப் பார்த்துப் பேசும் சந்தர்ப்பம், அவளைப்போன்ற ரசிகத்தன்மை நிறைந்த

பெண்ணோடு பேசுவதனால் ஏற்படக்கூடிய பயன், தமது பாண்டித்தியத்தையும் ரசிகத்தன்மையையும் காட்டுவதற்காகக் கிடைத்திருக்கும் பொன்னான தருணம் ஆகியவற்றைக் கை நழுவ விடுவது கூடாது என்று எச்சரித்துக் கொண்டிருந்தது. அப்படிச் செய்வதானது வருங்காலச் சந்ததியர்களுக்குத் தீங்கிழைப்பதாக முடியும் என்றும் அறிவுறுத்திக் கொண்டிருந்தது. ரசிகத்தன்மை வாய்ந்த பெண் ஒருத்தி தன் வெட்கம் மானத்தை விட்டு விட்டு, அவரை அழைத்திருக்கிறாள். அவர் அதை மறுத்தால் பயங்கொள்ளித்தனமாக முடியாதா?

அறையில் இருந்த கடிகாரம் பதினொன்றரை அடித்தது. மதுபர்க்க சங்கர சாஸ்திரி எழுந்து நின்றார். வெகு நேரம் 'போவதா, வேண்டாமா?' என்று யோசித்தார். 'நாம் தன்னல நோக்கத்தோடு முன்னேறவில்லை' என்ற எண்ணம் அவருக்கு மனோதிடத்தை அளித்தது.

அவர் வராந்தாவைப் பார்த்தார். அங்கு யாரும் இல்லை. மாடிப்படியை ஒரு நோட்டம் விட்டார். அங்கும் யாரும் இல்லை. இடம், பொருள், ஏவல் எல்லாம் அவருக்கு அநுகூலமாக இருந்தன. அவர் மெதுவாக மாடிப்படி ஏறலானார்.

அவர் கால்கள் எழும்ப மறுத்தன. உள்ளம் தளர்ந்தது. வெட்கம் வேறு சேர்ந்து கொள்ளவே, அவர் உடல் முழுவதும் வியர்த்து விறுவிறுத்து விட்டது. அவருக்கு இருந்த மனக் கலவரத்தில் ஒன்றும் புரியவில்லை.

அவர் தம் மனத்தை ஒருமைப்படுத்த முனைந்தார். அவர் முனைய முனைய அது பல முனைகளிலும் ப்ரவிப்

பரவி அவரை அச்சத்துக்கு ஆளாக்கியது. அப்புறம் அவர் கண்களுக்கு ஒரே வழிதான் தோன்றியது. 'நல்லவனாகக் கீழே இறங்கிப் போய் விடுவதுதான் நலம்' என்பதுதான் அந்த வழி.

ஆனால் கால்கள் முன்னுக்கும் போகமாட்டோம், பின்னுக்கும் போகமாட்டோம் என்று சத்தியாக்கிரஹம் செய்யத் தொடங்கி விட்டன. நெற்றியில் அரும்பிய வியர்வையைத் துண்டினால் துடைத்துக்கொண்டார். பிறகு துணிவையெல்லாம் ஒன்று கூட்டிக்கொண்டு மீண்டும் படியேறினார். மெதுவாகக் கதவைத் தள்ளினார். அது திறந்து கொண்டது. நிலைப்படியில் நின்று கொண்டு மேலே கீழே நாற்புறமும் ஒரு முறை பார்த்தார். எங்கும் பூரண அமைதி நிலவியிருந்தது. அவர் அறைக்குள் நுழைந்தார். ஒருபுறம் விடிவிளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அழகான மெத்தையில் யாரோ படுத்துக் கொண்டிருந்தார்கள்.

மதுபர்க்க சாஸ்திரிக்கு இரக்கம் உண்டாயிற்று. 'பாவம், எத்தனை நேரம் நமக்காக வழி மேல் விழி வைத்த வண்ணம் காத்துக் கிடந்தாளோ? கடைசியில் களைத்துத் தூங்கிப் போயிருக்கிறாள்! பிறரைக் கல் நெஞ்சர் என்று சொல்லிவிட்டு, நாமே எத்தனை கல் நெஞ்சினராக ஆகிவிட்டோம்?' என்று தம்மைத் தாமே நொந்து கொண்டார்; நிந்தித்துக்கொண்டார்.

அறையில் அமைதியின் பரிபூரண ஆட்சி நடந்து கொண்டிருந்தது. கட்டிலிலிருந்து படுத்திருப்பவர் மூச்சு விடும் மெல்லிய தொனி மட்டுமே கேட்டது.

கட்டிலை நெருங்கிய மதுபர்க்க சாஸ்திரி கண நேரம் பேசாமல் நின்ருர். பிறகு துணிவை வரவழைத்துக் கொண்டு போர்வையைத் தொட்டு 'மனோரமா!' என்று கூப்பிட வாய் எடுத்தார். அதற்குள் கட்டிலிலிருந்து யாரோ குதித்து எதிரே வந்து நின்ருர்கள்.

நின்று கொண்டிருந்தது ஆண் அல்ல; பெண். அந்தப் பெண் உருவம்தான் என்ன கோரம்! நோயினுல் கறுத்துக் கன்னிப்போன தோல், உலர்ந்து ஒட்டிப் போன உடல், பைத்தியக்காரர்களைப் போல் பேந்தப் பேந்த விழிக்கும் கண்கள், இத்தகைய பயங்கர அழகைப் பெற்றிருந்த மனோரமாவைப் பார்த்ததும் மதுபர்க்க சாஸ்திரிக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது.

"ஏண்டா! உன் சிற்றன்னைக்கு விஷமா கொடுக்க வந்திருக்கிருய்? உன் உயிரை வாங்கிவிட்டு மறு காரியம் பார்க்கிறேன், பார்!" என்று ஆவேசத்துடன் கூறினுள் அவள்.

அவ்வளவுதான், மதுபர்க்க சாஸ்திரிக்கு உதறல் எடுத்தது. அவர் உடல் வியர்வையினுல் சொட்டச் சொட்ட நனைந்து விட்டது. மனோரமா பெண் புலியாகி அவர் மீது பாய்ந்தாள். நிலைமை மிகவும் இசை கேடாகி விட்டது. உதவிக்கு யாரையாவது கூப்பிடலாம் என்ருல் எப்படிக் கூப்பிடுவது? அவரது ரகசியங்கள் அம்பலமாகி விடாதா? எனவே, சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் திக்குமுக்காடினுர். தமக்கும் மனோரமாவுக்கும் இடையே நிகழப் போகும் பெரும் போர் அவரது கண்ணெதிரே விசுவரூபமெடுத்து நிழற்காட்சியெனப் பல காட்சிகளைக் காட்டி நின்றது.

நிகழப்போகும் இந்தப் போரின் பொழுது, அவர் வணங்கி வழிபடும் இலக்கியப் பிரம்மாக்கள், அமரர்கள் வாழும் வானுலகத்திலிருந்து பார்த்து ரசிப்பார்களா? அவரது யுத்த சாதுரியத்தைப் புகழ்வார்களா? இதை யெல்லாம் அவரால் அப்பொழுது கற்பனைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. சொர்க்க வாசிகளான தேவர்கள் மகாபாரதம் நிகழும்பொழுது பூமாரி பொழிந்தார்களாமே, அப்படி இங்கேயும் நிகழுமா? இதையும் அவரால் சிந்தித்துப் பார்க்க இயலவில்லை.

ஒரே பாய்ச்சலில் மதுபர்க்க சாஸ்திரி அறைக்கு வெளியே வந்தார். திரும்பிக்கூடப் பாராமல் கடகட வென்று இறங்கிக் கீழ்ப் படிக்கு வந்தபின்தான் மூச்சே விட்டார். வந்த வேகத்தில் வேட்டியும் சொக்காயும் காதாங்கியில் மாட்டிக் கொண்டு கிழிந்தது கூடத் தெரியவில்லை. தலைதெறிக்க ஓடித் தற்காப்புக்கு முயன்றதில் மதுபர்க்க சாஸ்திரி உயிர்ப்பிணமாகவே படியருகில் உட்கார்ந்து விட்டார்.

சிறிது நேரத்துக் கெல்லாம் இரண்டாம் மாடியிலிருந்து இனிய குரலில் பிருந்தாவனன் தெம்மாங்கு மெட்டில் பாடுவது கேட்டது.

"நள்ளிரவின் அமைதியிலே
காரிருள் மண்டிக்கிடக்கையிலே
கண்ணிரண்டும் இமைக்காத
காதலர் கதை கேளுமையா!"

பாட்டைக் கேட்டதும் மதுபர்க்க சங்கர சாஸ்திரியின் மனத்திலே ஒரு மின்னல் பளிச்சிட்டது. மனோரமாவுக்கு என்ன ரகசிய நோய் ஏற்பட்டிருந்ததென்றும்,

கடிதங்கள் எல்லாம் யார் சொல்லி யார் எழுதியிருக்க வேண்டும் என்ற விவரங்களும் அதன் ஒளியில் தெள்ளென விளங்கின. மேலே இரண்டாவது மாடியிலே உட்கார்ந்து பாடிக் கொண்டிருந்த பிருந்தாவனன்தான், நர்ஸைக் கொண்டு இந்த நாடகம் நடத்தியிருக்க வேண்டும் என்பதைக்கூடப் 'புரிந்துகொள்ளவில்லை யென்றால் மதுபர்க்க சாஸ்திரி தம்மை இலக்கிய பிரம்மாக்கள் கோஷ்டியில் ஆதாரப் புள்ளியாக எப்படி நினைத்துக் கொள்ள முடியும்?

விடியற்காலையில் சூரத் ஸ்டேஷனில் ஒரு இளைஞர் பம்பாய்க்கு டிக்கட் வாங்கிக்கொண்டிருந்தார். இரவு தூக்கமில்லாத காரணத்தினால் மிகவும் களைப்புற்றுக் காணப்பட்ட அந்த இளைஞர் வேறும் யாரும் இல்லை; மதுபர்க்க சங்கர சாஸ்திரியேதான்.

# சொர்க்கத்திலுமா சீர்திருத்தம்?

மிஸ்டர் ரேவடியாவுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு குரு சிஷ்ய பாவத்தைக் சேர்ந்தது. கோக லேக்கும் ஜான்ஸனுக்கும் உள்ள தொடர்பு என்று கூறி னுலும் பொருந்தும். நான் அவருடைய நடை, உடை, பாவனையை அப்படியே இம்மி கூடப் பிசகாமல் பின் பற்றி வந்தேன். காரணம், நான் அவரைப் பெரியாரிலும் பெரியாராகக் கருதி வந்தது தான். அவரது வாழ்க்கை லட்சியங்களிலே எனக்கு அசைக்க முடியாத ஒரு நம் பிக்கை; அபாரப் பற்று. அவற்றை நான் வணங்கி வழி பட்டேன் என்றல் பார்த்துக் கொள்ளுங்களேன். அவரது பேசும் ஆற்றலைக் கண்டு நான் பிரமித்துப் போய் அசந்து நிற்பேன். என்னைப் பொறுத்த வரை அவரை நான் வெற்றி கொள்ள முடியாத மாவீரராகவே மதித்து வந்தேன்.

மிஸ்டர் ரேவடியாவின் வாழ்க்கை லட்சியங்கள் நடைமுறை உலகத்தின் அடிச்சுவட்டில் வந்தவை. அவர் நடை முறை உலகத்தை நெருங்கி வழிபட்டு வந் தார். அதன் போக்கிலே மெய்ம் மறந்து விட்ட பக்த ராக வாழ்ந்தார். அதன் போக்கைப் புரிந்து கொள் ளாமல், யாராவது சிறிது மாறுபட்டு நடந்து விட்டால் கூட, அவருக்குக் கண்கள் சிவந்து விடும்; அவனைத் தமது பரம விரோதியாகவே பாராட்டத் தொடங்கி விடு வார். பணக்காரராக இருந்ததோடு அவர் ஐரோப்பா, அமெரிக்கா போன்ற நாடுகளுக்கும் போய் வந்திருந்

தார். தற்கால இலக்கியத்தை மிகப் பாங்கான முறையில் பயின்றிருந்தார்.

அவர் மிகுந்த கெட்டிக்காரர், சாமர்த்தியசாலி. கல்வி கேள்விகளிற் சிறந்தவர். சீர்திருத்த நோக்கங் கொண்டவர். நவ நாகரிகத்திலே திளைத்தவர். அதனுல் தமது அறிவுக் கட்டையான முன்னோர்களின் பல செயல்களையும், எள்ளி நகையாடும் நோக்கத்துடனேயே பார்த்து வந்தார். எனவே, நானும் என் பொருளாதார நிலை, அறிவுத் திறன் ஆகியவற்றுக்கேற்ப, அவரது அடிச்சுவட்டைப் பின் பற்றுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டேன்.

இவ்வாறு, நாங்கள் நீண்ட ஆலோசனைக்குப் பிறகு ஒரு உறுதியான, தீர்மானமான, பட்சபாதமற்ற முடிவுக்கு வந்தோம். எங்களிடையே உற்சாகம் கரை புரண்டு பொங்கத் தொடங்கியது. நாங்கள் நெடுநேர ஆலோசனைக்குப் பின் வந்த அந்த முடிவு இதுதான் :

இவ்வளவு திறமைகளும், இவ்வளவு வித்தைகளும், இவ்வளவு அறிவுத்திறனும் இத்தனை நாளும் இல்லாமல் திடீரென்று இந்த நவீன காலத்தில் தான் டபக்கென்று குதித்து வந்திருக்கின்றன. இதற்கு முன் இவையெல்லாம் இல்லவே இல்லை.

இந்த முடிவின் காரணமாக, 'பண்டைய பாரதத்தில் காட்டு மிராண்டிகளே வாசம் புரிந்து வந்தார்கள். அவர்களது காரியங்களனைத்தும் மடமைமிக்கதாகவும் பயங்கொள்ளித்தனம் நிறைந்ததாகவுமே இருந்து வந்தன' என்ற உறுதி அவரது உள்ளத்திலே அசைக்க முடியாத ஆணி வேராக வேரூன்றி விட்டது.

அக்காலத்து மக்களின் மூளையிலே பாசி படிந்திருக்க வேண்டும் என்றும், நம்மைப் போன்ற கெட்டிக்காரர்களும், நன்ருகத் திருந்தியவர்களும், அறிவாற்றல் நிறைந்தவர்களும், தந்திரமாகப் பிழைக்கத் தெரிந்தவர்களுமான நற்புத்திரர்களை ஈன்றெடுத்ததைத் தவிர அவர்களால் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை என்றும் கூட அவர் சொல்லுவார்.

இம்முடிவைப் பற்றியும் இதில் உள்ள குறைபாடுகளைப் பற்றியும் நாங்கள் எத்தனையோ தடவைகள் பேசியிருக்கிருேம். தற்காலத்துப் பண்பாட்டிலே தோய்ந்துள்ள பல அரும் பெரும் குணுதிசயங்களைப்பற்றிவாயார வார்த்தை யாடியிருக்கிருேம். முன்ஞேர்களின் முட்டாள் தனத்தை எள்ளி நகையாடியிருக்கிருேம்.

எத்தனையோ தடவைகள் பார்த்திருக்கிறேன், மிஸ்டர் ரேவடியா பகல் பத்து மணிக்குத் தான் விழித்து எழுந்திருப்பார். வாயிலே புகைச் சுருட்டும் கையிலே தேநீர்க் கோப்பையுமாகக் காட்சி தருவார். டிரெஸிங் கவுனை அணிந்த வண்ணம் படுக்கையில் படுத்தவாறே பல விஷயங்களைப் பற்றிப் பேசுவார்.

இம்மாதிரி நேரங்களில் நான் அவர் வீட்டுக்குப் போவதுண்டு. நாகரிகம் தெரியாத நமது முன்ஞேர்கள் அளித்துச் சென்ற இந்தக் கறுப்புத் தோலை மறந்து, அவர் எவ்வளவு அழகாக, நவநாகரிகம் தோய்ந்தவராக, 'அப்டுடேட்'டாக இருக்கிருர் என்று போற்றிப் புகழ்வது உண்டு. இல்லாவிட்டால் இருவரும் நேர்த்தியான நாகரிக ஆடை அணிந்து கொண்டு 'பாண்டு ஸ்டாண்டை' சுற்றி வருவோம். அந்த நேரத்தில் இரண்டொரு

நாழிகை நேரத்துக்கு உண்மை நிலையை அறவே மறந்து இன்ப வாரிதியிலே திளைப்போம். 'பண்பாடு அற்ற காட்டு மிராண்டிகள் வாழும் நாட்டைச் சேர்ந்தவர்கள் தான் நாம்' என்ற நினைவே எங்களுக்கு இராது. இருந் தாலும் என்னையோ மிஸ்டர் ரேவடியாவையோ யாரா வது முட்டாள் மனிதன் ஒருவன் பார்த்தானானால், கோவாக்காரர்கள் என்றேதான் எண்ணுவான். இது தான் எங்களுக்கு ஒரு பெரிய தர்மசங்கடமாகத் தோன்றி வந்தது. கோவாக்காரர்கள் கறுப்பர்களாயிருந்த பொழு திலும் ஐரோப்பியர்களைக் காப்பி அடிப்பதில் கைதேர்ந்த வர்கள். குதிரை, தான் விழுந்ததோடு அல்லாமல் குழியும் பறித்ததாம் என்ற கதையாக எங்களுக்கு இந் தக் கோவாக்காரர்கள் ஏன் தான் இப்படி அவப் பெயர் வாங்கி வைக்க வேண்டுமோ, தெரியவில்லை! எங்களுக்கு அந்த முட்டாள்கள் சொல்வதைக் கேட்டு ஆத்திரம் ஆத்திரமாக வரும்.

மிஸ்டர் ரேவடியாவிடம் எல்லாவற்றைக்காட்டிலும் மிகமிகப் பாராட்ட வேண்டிய ஒரு குணம் இருந்தது. அவர் தாம் மட்டும் திருப்தி அடைய வேண்டும் என்ற குறுகிய நோக்கம் கொண்டவரல்ல. தாம் பெற்ற இன் பத்தை இவ்வையகமும் பெற வேண்டும் என்ற ஆவல் மிகக் கொண்டவர். தமது கொள்கையைச் சிருஷ்டி யின் மூலை முடுக்குகளிலெல்லாம் பரப்ப வேண்டும் என்பது அவரது அவிக்க முடியாத ஆசை. கடந்த கால இந்தியர்கள் அறிவிலிகளாக வாழ்க்கை நடத்தியவர்கள் என்பது அவரது அசைக்க முடியாத நம்பிக்கை. நடை முறை உலகத்துக் கொள்கைகளை பாரத மக்கள் பயின் றார்களானால், அவர்களிடத்திலே மனிதத் தன்மை

வந்து விடும் என்றும் அவர் நம்பினர். தம்மைப்போன்ற பேச்சில் வல்ல, புத்தியில் சிறந்த, சாமர்த்திய சாலியான சீரிய மானிடன், ஜனகர் அசோகர் ஆகியவர்களது காலத்தில் பிறந்திருந்தானுனல், பாரத தேசம் கடைத் தேறியிருக்கும். நாம் எல்லோரும் சுத்தக் காட்டுமிராண் டிகளாக இல்லாமல் சீர்திருந்திப் போயிருப்போம். நாட்டு வரலாறு வேறு விதமாக எழுதப்பட்டிருக்கும். —தமது அறிவாற்றலைக் கொண்டு அவர் இப்படிப் பல விதமாக எடைபோட்டு வைத்திருந்தார்.

* * *

ஒரு நாள் இரவு எங்களிடையே இவ்விஷயம் பற்றி நீண்ட விவாதம் நடந்தது. இறுதியில் என்னையும் மீறி ஒரு உண்மையைச் சொல்லும் படியாகி விட்டது.

"மிஸ்டர் ரேவடியா! உங்களைப் போன்ற உற் சாகமே உருவானவர்கள் என்றைக்காவது சொர்க்கத் துக்குப் போகும்படி நேர்ந்தால், அங்கும் இதுபோல் பிரமிக்கத்தக்க ஒரு புதிய கிளர்ச்சியை உண்டு பண் ணியே தீருவீர்கள்!" என்றேன்.

"அது எப்படி?"

"சொர்க்கத்திலே கிடந்து அல்லலுறும் நமது முன் னோர்கள் உங்கள் உபதேசத்தைக் கேட்டார்களானல் கட்டாயம் பயன் பெறுவார்கள். அவர்களும் திருந்தி நல்ல நிலையை அடையலாம் அல்லவா?" என்றேன்.

"உண்மையான வார்த்தை. உன் வாய்க்குச் சர்க்கரைதான் போடவேண்டும். 'Better Late than never'—ஒன்றும் இல்லாததற்குத் தாமதமாகச் செய்

வது நல்லது என்பார்கள். சொர்க்கத்தில் செய்தாலே போயிற்று. அங்கு கிடக்கும் கிழட்டு முண்டங்களுக்காவது புத்திவரட்டுமே!'' என்றார் மிஸ்டர் ரேவடியா

"நியாயமான பேச்சு! நான் வரட்டுமா?'' என்று கூறி நான் விடைபெற்றுக் கொண்டேன்.

* * *

***நா***ன் என் வீட்டை அடைந்தேன். என் உள்ளத்தை விட்டு அந்தப் பேச்சு அகலவே இல்லை. ஆழ்ந்த யோசனையில் ஆழ்ந்த பொழுது என் உள்ளக் கடலிலே எத்தனையோ அலைகள் எழுந்தன. 'மிஸ்டர் ரேவடியா சொர்க்கத்துக்குச் சென்று அங்குள்ள மகாத்மாக்களைச் சந்தித்த பிறகு அவர்களுடைய பழைய வாழ்க்கையில என்ன என்னவெல்லாம் மாற்றங்கள் ஏற்பட்டிருக்கும்?' என்பதைப் பற்றியும் மனச் சிறகுகள் அடித்துக் கொண்டன. வெகு நேரம் வரை இதே யோசனையில் ஆழ்ந்திருந்தவன் எப்பொழுது தூங்கினேனோ, எனக்கே தெரியாது. ஆனால் தூங்கியும் தூங்காதவனாகவே தான் நான் இருந்தேன். என் உள்ளம் வலுக்கட்டாயமாக விழித்துக்கொண்டிருந்தது. என் கண்கள் மூடியிருந்தனவா, திறந்திருந்தனவா என்ற நினைவு எனக்கு இப்பொழுது இல்லை.

என் கண்களெதிரே ஒரு காட்சி படர்ந்தது. நான் கண் அயர்ந்திருக்கிறேன். எனது ஆப்த நண்பரும் மதிப்புக்குரிய குருநாதருமான ரேவடியா அவர்களிடமிருந்து ஒருவன் செய்தி கொண்டு வந்திருக்கிறான்.

"ஐந்து யுகங்களுக்குமேல் ஓடி விட்டன. அவர் சொர்க்கத்தைச் சீர்திருத்துவதில் முனைந்திருக்கிறார்.

தங்களைக் கையோடு அழைத்து வருமாறு கூறி என்னை இங்கே அனுப்பியிருக்கிருர்" என்ருன் அவன்.

"என்னை எதற்காக அழைத்து வரச்சொல்கிருர்?"

"அங்கு நடைபெற்றிருக்கும் சீர்திருத்தங்களைப் பார்வை யிடுவதற்காகத்தான்! புறப்படுவதாயிருந்தால் விமானம் தயாராயிருக்கிறது" என்ருன் அவன்.

என் மதிப்புக்குரிய உணர்ச்சி மிகுந்த அறிவு ஒரு முறை துள்ளிக் குதித்தது. சிறிது நேரத்துக்கு முன் தான் நாம் ரேவடியாவைச் சந்தித்து அளவளாவி விட்டு வந்திருக்கிருேம் என்பதையே மறந்தேன். மிஸ்டர் ரேவடியா சொர்க்க பூமியில் சாதித்துள்ள சாதனைகளைக் கண்டு வரும் ஆவல் உந்தித்தள்ளவே எழுந்து நின்று விட்டேன். சீக்கிரமாக மாற்றுடை தரித்துக்கொண்டு விமானத்தில் போய் ஏறினேன். நாங்கள் வாயுவேக மனுேவேகத்தைக் காட்டிலும் வேகமாகப்பறந்தோம். சிறிது நேரத்துக் கெல்லாம் என் தோழன், "நாம் சொர்க்கத்தை அடைந்து விட்டோம்!" என்ருன்.

"அதற்குள்ளாகவா ?"

"ஆம்!"

சொர்க்கத்தைக் கண்ணுற்ற எனக்கு மனத்தில் அபாரமான அதிருப்தியே நிலவியது. இதுவா சொர்க்கம்? இதென்ன சொர்க்கம்? வானளாவும் மாட மாளிகைகளையும் கூட கோபுரங்களையும், விசாலமான ராஜ வீதிகளையும், பெருங்கால்வாயாக ஓடும் சாக்கடைகளையும், தோட்டம் துறவுகளையும், ஆலையின் புகைக் கூண்டுகளையும் பார்க்கப் போவதாகக் கனவு கண்டு

கொண்டிருந்த எனக்கு ஏமாற்றமே உண்டாயிற்று. காரணம், நான் அடர்த்தியான கானகத்தைத்தான் அங்கே கண்டேன்.

":இதுவா சொர்க்கம்? நான்ஸென்ஸ்!"—என் வாய் என்னையறியாமலே முணுமுணுத்தது.

"ஆம், இது தான். இது சொர்க்கத்தில் உள்ள இந்திய இலாக்கா!" என்ருன் என் கூட்டாளி.

"அட கண்ணராவியே! இங்கும் இந்தியர்களிடையே அறிவு வளர்ந்ததற்கான அறிகுறியைக் காணுமே!" என்று நான் நெற்றிப் பொட்டில் அடித்துக் கொண்டேன்.

"ஐயா!" என் தோழன் தொடர்ந்தான்: "இங்கே இன்னும் எதிர் பார்த்த அளவு சீர்திருத்தம் நடந்தபாடியில்லை. இப்பொழுது தான் சில நாட்களாக மகாத்மா ரேவடியா அவர்களின் நன் முயற்சியினுல் மரங்களை எண்ணிக் குறி போடும் வேலை ஆரம்பமாகியிருக்கிறது. குத்தகைக்கு விடுவதைப் பற்றிக் கூட பலத்த யோசனை நடந்து கொண்டிருக்கிறது!"

அதைக் கேட்டு எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. 'நமது நண்பர் உண்மையிலேயே புது யுகத்தைச் சேர்ந்தவர் தாம். சந்தேகமே இல்லை' என்ற உறுதி மேலும் வலுக்கலாயிற்று. 'சபாஷ்! கல்வி போதனை என்ருல் இதுதான்' என்றும் முடிவுக்கு வந்தேன்.

"மிஸ்டர் ரேவடியா இந்தச் சீர்திருத்தங்களை எப்படி ஆரம்பித்தார்?" என்று ஆவலுடன் வினவினேன்.

"முதலில் அவர் தம்முடன் எத்தனையோ பொருள்களைக் கொண்டு வந்தார். அவற்றின் உதவியினால் மக்களின் மனத்தை மாற்ற முயன்றார். நாளடைவில் எல்லோருக்குமே சீர்திருத்த ருசி தட்டலாயிற்று."

"அப்படியா சமாசாரம்! சரி, வாருங்கள்! எனக்கு எல்லாவற்றையும் காட்டுங்கள். நான் சோம்பேறி அல்ல. பொன்னான நேரத்தின் மதிப்பு எனக்கு நன்றாகத் தெரியும்!"

"ரொம்ப சரி. இப்படி வாருங்கள்!" என்று கூறி என் கூட்டாளி காட்டுக்குள் நுழைந்து விட்டான்.

'என் நண்பர் என்ன என்ன மாறுதல்கள் எல்லாம் செய்திருக்கிறார்? நான் எதை எதையெல்லாம் பார்ப்பேன்? அவை எப்படி எப்படி இருக்கும்?' என்பது போன்ற விஷயங்களைக் கற்பனைக் கண் கொண்டு நோக்கலானேன். பம்பாயைப் போன்ற சீர்திருந்திய நகரத்தில் இருந்தபிறகு, காடு பிடிக்குமா? இருந்தாலும் மதிப்புக்குகந்த மிஸ்டர் ரேவடியாவின் அரும் பெரும் செயல்களைக் காணவேண்டும் என்ற ஆவலுடன் பின்தொடர்ந்தேன். 'எத்தனை தூரம் சென்றேன், எவ்வளவு நேரம் சென்றேன்?' என்பதற்கெல்லாம் ஒரு கணக்கு வழக்குப் போட்டு என்னால் கூற இயலாது.

வெகு தொலைவிலிருந்து அபஸ்வரத்தை அள்ளி வீசும் சரோத் வாத்தியத்தின் ஒலி வந்தது. ஒலி வந்த திசையை நோக்கினேன். தேஜஸே உருவான ஒரு வயது முதிர்ந்த பெரியார் உட்கார்ந்து அந்த வாத்தியத்தை வாசித்துக் கொண்டிருந்தார். நம் நாட்டு அறி

யாத மக்கள் அவரைப் பெரியார் என்றும் மகாத்மா வென்றும் அடைமொழியிட்டு அழைப்பார்கள்.

அவரது விழிகளிலே ஒளி பளிச்சிட்டுக் கொண்டிருந்தது. என் அபிப்பிராயத்தைக் கேட்டால், சீர்திருத்த நோக்கம் படைத்த இந்தக் காலத்தில் இத்தனை நீண்ட தாடி வைத்துக் கொள்வது முற்றிலும் நாகரிகத்துக்கு முரணுகவேதான் கருதப்படும் என்று கூறுவேன்.

நமது ரேவடியா மதத்தை அநுஷ்டிப்பதென்றுல், விடியற் காலையில் சூரியன் உதிப்பதற்கு முன்பாகவே, தாடி மீசையை எடுத்துக் கன்னத்தை வழவழப்பாக வைத்துக் கொள்ள வேண்டும்.

ஸரோத் வாத்தியம் வாசிக்கும் பெரியார் மான் தோலில் ஒரு பஞ்சு மெத்தை போட்டுக் கொண்டு அமர்ந்திருந்தார். அவருக்கெதிரே வாசனைத் திரவியங்கள் ஏராளமாக வைத்திருந்தன. அருகிலேயே ஒரு வகையான பாத்திரத்தில் ஐஸ்கிரீமைப் போன்ற ஏதோ ஒரு விசேஷமான பொருள் வைக்கப்பட்டிருந்தது. இந்தப் பெரியார் யாராக இருக்கலாம் என்ற கேள்வி என் உள்ளத்தில் பிறந்து ஆவலை மூட்டியது. நான் அருகில் சென்று அவருக்கு வணக்கம் தெரிவித்தேன். வயது முதிர்ந்த அப்பெரியார் சரோத் வாத்தியம் வாசிப்பதைச் சற்று நிறுத்திஞர்.

“மகாராஜ்! தாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?” என்று பவ்யமாகக் கேட்டேன்.

“குழந்தாய்! இதுகூட உனக்குத் தெரியவில்லையா?” என்றுர் பிராயம் முதிர்ந்த அப்பெரியார்.

"இல்லையே, சுவாமி!"

"பொருளாதார சாஸ்திரத்தின் விதி முறை என்ன, தெரியுமா? மனிதன் தன் தேவைகளை அதிகரித்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது தான் மனிதன் உழைப்பாளி ஆகமுடியும். உழைப்பாளியாக ஆனால் தான் உலகத்திலே சீர்திருத்தம் உண்டாகும்!"

எனக்கு ஏற்பட்ட வியப்புக்கு ஓர் வரம்பு இல்லை. இது மிஸ்டர் பாஸெட்டின் பொருளாதார சாஸ்திரத் தின் கட்டுத் திட்டம் அல்லவா? இது இங்கே எப்படி வந்தது? இது கட்டாயம் என் நண்பர் ரேவடியாவின் பணியினால் ஏற்பட்ட பயனாகத்தான் இருக்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்.

"ஆமாம். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"அட கண்ணராவியே! இது கூடப் புரிய வில்லையா? நான் எனது புலன்களை வளர்த்துக் கொண் டிருக்கிறேன். சுகபோகத்திலே ஆசை வளராவிட்டால், தேவைகளும் வளராது. ருசியை அதிகரித்துக் கொள்வ தற்காக இந்த ஐஸ்கிரீம். நறுமண உணர்ச்சியை வர வழைத்துக் கொள்வதற்காக இந்த வாசனைத் திரவியங் கள். ஸ்பரிச சுகத்தைப் பெறுவதற்காக இந்த மெத்தை போட்டுக் கொண்டிருக்கிறேன். இந்த சரோத் வாத் தியம் வாசிப்பதனால் என்னிடத்திலே சங்கீதப் பண்பு பெருகுகிறது!" என்றார் அப்பெரியவர்.

"அப்படியானால் சுக போகத்தைப் பூர்ணமாகப் பெறுவதற்கு உருவம் மட்டுமே எஞ்சியிருக்கிறது. என்று சொல்லுங்கள்!"—என்னையும் மீறி நான் இந்தக் கேள்வியை அவரிடம் கேட்டு விட்டேன்.

"அதையும் இங்கே யார் விட்டு வைத்திருக்கிறார்கள்? யூனன் நாட்டைச் சேர்ந்த சிற்பிகள் நிர்மாணித்த எத்தனையோ நிர்வாணச் சிலைகளும் நான் தருவித்து வைத்திருக்கிறேன்!''

"அவை இங்கே எப்படி வந்தன?''

"உனக்குத் தெரியாதா? நீ புதிதாக வந்திருக்கிறாய் என்று தோன்றுகிறது. இப்பொழுது தான் சில காலமாக ஒரு மகாத்மாவின் தூண்டுதலினால் இங்கே ஒரு ஆசிரமம் நிறுவப்பட்டிருக்கிறது. அதில் அநேக விதமான பொருள்கள் கிடைக்கின்றன!''

"அந்த மகாத்மா யாரோ?''

"ரேவடியா என்னும் பெயருள்ள ஒரு பெரியார்!''

"என்ன?''

நான் மகிழ்ச்சியினால் மனமும் குரலும் ஒருங்கே தழுதழுக்கக் கேட்டேன்.

"முதலில் எங்களுக்கு இந்த விஷயங்களெல்லாம் ஒன்றும் தெரியாமல் தான் இருந்தது. ஆனால் இந்தப் பெரியார் வந்ததும் எங்கள் கண்கள் திறந்து கொண்டு விட்டன. நாங்கள் சீர்திருந்த முயன்று வருகிறோம்!''

"ஆனால் பெரியவரே! ஒரு சந்தேகம். ரூப, ரஸ, கந்தம் அதாவது உருவம், சுவை, மணம் ஆகியவற்றின் இன்பத்தைப் பருகுவதற்குப் பயிற்சி தேவைப்படுகிறதா? ஆச்சரியமாயிருக்கிறதே! எங்களுக்கு இவையெல்லாம் எவ்வித சிரமமும் இன்றி வெகு சுலபமாகக் கிட்டி விடுகின்றனவே!'' என்றேன்.

"தம்பி! நீங்கள் எல்லோரும் மிகுந்த பாக்கிய சாலிகள். நாங்களோ இவ்வளவு நாட்களும் வெறும் காட்டுமிராண்டிகளாக இருந்தோம். அதிலும் என்னைப் பற்றிக் கேட்க வேண்டியதே இல்லை. நான் காட்டு மிராண்டிகளுக்கெல்லாம் காட்டுமிராண்டியாக, காட்டு மிராண்டி நாயகனாக விளங்கி வந்தேன். அந்த வாழ்க் கையைக் களைந்து எறிந்து ஆறாயிரம் ஆண்டுகள் கடந்து விட்டன. இப்பொழுதுதான் தெரிகிறது, நான் அந்தக் காலத்தில் போட்டது அவ்வளவும் வெளி வேஷம் என்று! அதனால் தான் நான் வெறும் ஜடமாகி விட்டேன், மூடனாகி விட்டேன். என்னைச் சேர்ந்தவர் களையும் அப்படியே ஆக்கி வைத்திருந்தேன்!"

"என்ன, வெளி வேஷமா?"

என்னையே பொறுமை உணர்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருந்த கிழவரைப் பார்த்துக் கேட்டேன்.

"ரூபம், ரஸம், கந்தம் ஆகியவற்றை அறவே ஒழிக்க வேண்டும் என்று என் முட்டாள் மனத்துக்கு எப்படியோ தோன்றி விட்டது. வைராக்கியம் பரவினால் தான் மனிதன் சீர்திருந்தியவனாகக் கருதப்படுவான் என்ற எண்ணம் என்னை உடும்புப் பிடியாகப் பற்றிக் கொண்டிருந்தது. இப்படி எண்ணி எண்ணி, நடை முறையிலே பயின்று பயின்று ஆறாயிரம் ஆண்டுகள் ஓடி விட்டன. அதன் முடிவு என்ன ஆயிற்று, தெரி யுமா? என் புலன்கள் அனைத்தும் வைராக்கிய நிலையை நன்கு பெற்று விட்டன. இப்பொழுது அவற்றைச் சரி யான வழிக்குக் கொண்டுவர முயல்வது மிக மிகக் கடினமாயிருக்கிறது. எத்தனை தான் பயிற்சி கொடுத்

தாலும் திரும்பத் திரும்ப வேதாளம் முருங்க மரம் ஏறும் கதையாகத் தான் இருக்கிறது. எப்பொழுது நான் திருந்தப் போகிறேனே, யார் கண்டார்கள்?''—நீண்ட பெரு மூச்சுக்கிடையே அந்தப் பெரியவர் தம் இயலாமையைத் தெளிவுறுத்தினர்.

"சுவாமி! மன்னிக்க வேண்டும். தாங்கள் முந்திய ஆசிரமத்தில் யாராக இருந்தீர்கள்? கருணை கூர்ந்து எனக்குக் கூறலாமா?''

"ஹூம், பழைய குப்பையை எதற்கு அப்பா கிளறுகிருய்?—எல்லோரும் என்னை வசிஷ்டர் என்ற பெயரால் அழைத்து என்னிடம் பெரு மதிப்பும் வைத்திருந்தார்கள்!'' என்ருர் அப்பெரியவர்.

"யார்? மகாத்மா வசிஷ்டரா?''—நான் என்னையும் மறந்து, எனது புதிய கொள்கைகளையும் மறந்து உரக்கக் கூவி விட்டேன். ரேவடியா சித்தாந்தப்படி இப்படியெல்லாம் அழைப்பது தவறு தானே? அது மட்டும் அல்ல, 'பகவான் வசிஷ்டருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம்!' என்று கூறியவாறு நெடுஞ்சாண்கட்டையாக அவர் காலடிகளில் விழப்போனேன். அவர்தான் கையைப் பிடித்துத் தடுத்து விட்டார்.

"குழந்தாய்! நீ இன்னும் முட்டாளாக-அறிவில்லாப் பாலகளுக இருக்கிருய். நீ நினைப்பது போல், நான் மதிப்புக் குரியவன் அல்ல; மரியாதைக்குகந்தவன் அல்ல. உனது இந்தப் பக்திக்கு அணுவளவும் அருகதை அற்றவன். மகாத்மா ரேவடியா அவர்கள் 'நான் முட்டாள்' என்பதை நன்கு நிரூபித்துக் காட்டி

விட்டார்கள். சரி, அதைப் பற்றி இனி பேசி என்ன பயன் ? இதோ ஒரு சீடன் யூனிச் சிலைகள் கொண்டு வந்திருக்கிருன். என் பயிற்சிக்குத் தடை ஏற்படுகிறது. நீ போய் வா!'' என்ருர் வசிஷ்டர்.

நான் மறுமொழி பேசாமல் அங்கிருந்து புறப்பட்டு விட்டேன். இது போல் ரேவடியா மதம் வளர்ச்சி யுறு மாளுல், சொர்க்கத்திலும் சீர்திருத்தம் கட்டாயம் ஏற்படும் என்ற நம்பிக்கையும் திருப்தியும் என் உள் ளத்தை நிறைத்தன. சிறிது தூரம் போவதற்குள்ளாகவே என் காதுகளில் சரோத் வாத்தியத்தின் அபஸ்வரமான ஒலி விழத் தொடங்கி விட்டது. 'ஆகா! என்ன சிரத்தை! என்ன சிரத்தை!' என்று வியந்து கொண்டே என் கூட்டாளியை அழைத்துக் கொண்டு சுற்றிவரப் புறப்பட்டேன். ரேவடியாவின் அறிவுத் திறனைப் பற்றி வாய் ஓயாமல் புகழ்ந்தவாறே நடந்தேன்.

சிறிது தூரம் சென்றிருப்போம். ஒரு பெரிய மரத் தடியில் இன்னுமொரு பெரியவர் கழுத்தை விறைப் பாக வைத்துக்கொண்டு பத்மாஸனத்தில் அமர்ந்திருந் தார். ஒளிச் சுடர்விடும் அவரது முகக்களையும் வெள் ளிக் கம்பி இழுத்தது போன்ற தாடியும் எனக்கு அவரிடம் அபார சிரத்தையை உண்டு பண்ணின. அவரைச் சூழ்ந்து அநேகர் கையில் சிறிய பெரிய பைக ளுடன் நின்று கொண்டிருந்தார்கள். அருகில் ஒரு சீடன் கை கட்டி வாய் புதைத்து நின்று கொண்டிருந்தான். நான் அவரைச் சமீபித்து வணங்கினேன். பிறகு எழுந்து பக்தி சிரத்தையுடன் கை கட்டி வாய் புதைத்து நின்றேன். மகாத்மா என்னைப் பார்த்துக் கேட்டார் :

"அப்பா! புதிதாக வந்திருக்கிறாயா?"

"ஆம். தங்களைத் தரிசித்துப் பயன் பெறும் நோக்கத்துடன் வந்திருக்கிறேன்!"

"போய் வா, அப்பா, போய் வா! எனக்குச் சிறிதும் அவகாசமே இல்லை. இத்தனை பேரும் என்னைப் பார்த்துப் போவதற்காகத்தான் தவம் கிடக்கிறார்கள்!"

"பெரியவர் அப்படிச் சொல்லக்கூடாது!"

"பின் எப்படிச் சொல்வது?—சரி, சரி! பொழுதை வீணாக்காதே. சொல்ல வேண்டியதைச் சுருக்கமாகச் சொல்லு!" என்றார் பெரியவர்.

"மகாராஜ்! இவர்கள் எல்லோரும் இங்கே இப்படிக் குழுமி என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? இதைக் கேட்டு அறிந்து போகத்தான் நான் தங்கள் சமூகத்துக்கு வந்திருக்கிறேன்!" என்றேன்.

"இது கூட உனக்குத் தெரியாதா? இவர்கள் எல்லோரும், தர்மம், ஆசாரம் இவற்றைப் பற்றி என்னிடம் அபிப்பிராயம் கேட்க வந்திருக்கிறார்கள்."

"சரி, இந்தப் பைகள் எதற்கு? இவற்றில் என்ன இருக்கின்றன?"

"பணம்! யார் அதிகப்பணம் கொடுக்கிறார்களோ, அவர்களுக்குப் பயன் தரக்கூடிய உபதேசங்களாகவே நான் கூறுவேன். சிருஷ்டியின் ஆரம்பத்தில், ஸ்மிருதி வகுத்த முதல்வன் நான்!" என்றார் அந்தப் பெரியவர்.

"யார்? ஸ்மிருதி வகுத்த முதல்வரா? மகாத்மா மனுவா?" என்று நான் பெரு வியப்புடன் கேட்டேன்.

" ஆமாம். நான் முதலில் ஒரு தர்ம சாஸ்திரத்தை இயற்றினேன். ஆனால் அப்பொழுது நான் சிறிது காட்டுமிராண்டியாக இருந்து விட்டேன். அதனால் எல்லோருக்கும் பயனளிக்கும் வகையில் சாஸ்திரத்தை இயற்றி விட்டேன். தன்னலமற்ற எண்ணத்துடன் தர்மோபதேசம் செய்வதுதான் சாலச் சிறந்தது என்று அக்காலத்தில் நான் எண்ணங் கொண்டிருந்தேன். அதனால்..."

" அதனால் தான் இப்பொழுது தாங்கள் இயற்றிய சாஸ்திரங்களின் கொள்கைகளை விலைபேசத் தொடங்கியிருக்கிறீர்களாக்கும் !"

" அட பைத்திக்காரரா ! நான் சொல்லவில்லையா, முன்பு காட்டுமிராண்டியாக இருந்து விட்டேன் என்று! முன்னால் கொஞ்சம் அசடனாக இருந்து விட்டேன். அதனால் தர்மத்தை இலவசமாக எல்லோருக்கும் எளிதில் கிடைக்கும் வகையில் உபதேசித்து வந்துவிட்டேன். இப்பொழுது ஒரு மகாத்மாவின் சத்சங்கத்தினால் நாங்கள் திருந்தத் தொடங்கியிருக்கிறோம். பணத்துக்குத் தகுந்த பொருள் என்பது அவரது சித்தாந்தம். எங்கே பணம் இருக்கிறதோ, அங்கே நியாயம் நிற்கிறது என்பது அவருடைய வாக்கு. அதனால் யார் அதிகப் பணம் தருகிறார்களோ, அவர்களுக்கு நலன் தருவதையே கூறுவது என்ற சீரிய கொள்கையைக் கடைப்பிடித்துச் சிறிது காலமாக அதை அநுஷ்டிக்க முற்பட்டிருக்கிறேன். அதனால் எனக்கும் லாபமாயிருக்கிறது. அவர்களுக்கும் லாபகரமாயிருக்கிறது !" என்றார் மகாத்மா மனு.

ஆமாம், தங்களை இத்தகைய நல்வழிக்குத் திருப்பிய அந்த மகாத்மா யார்? மிஸ்டர் ரேவடியா அவர்கள் தானே?'' என்று மகிழ்ச்சி பொங்கக் கேட்டேன்.

"ஆமாம், ஆமாம்! அவரே தான். உனக்கு அவரைத் தெரியுமா?—சரி, சரி! போய் வா! எனது விலைமதிக்க முடியாத பொழுது வீணாகிறது. நீ இங்கே நின்றால் உன்னையும் பணம் கேட்டு விடுவேன்!'' என்று பயமுறுத்தினார் மனு.

அவர் சொல்லி முடிப்பதற்குள்ளாகவே, நான் அங்கிருந்து நழுவி விட்டேன்! என் நண்பர் ரேவடியா அவர்களின் செல்வாக்கு இத்தனை தூரம் பரவும் என்ற நம்பிக்கையே எனக்கு ஆதிகாலத்தில் இல்லை.

சபாஷ், ரேவடியா! சீர்திருந்திய உலகத்தின் தலைவர்களின் பெயர் வரிசையில் தங்கள் பெயர் தான் தலை வரியில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும்!

இப்படிச் சிந்தித்துக் கொண்டே நடந்த எனக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டது. என்னோடு வந்த கூட்டாளியைப் பார்த்து, "ஏன் அப்பா! இவர்கள் எல்லோரும் ஏன் இப்படி அடங்கி ஒடுங்கிக் கிடக்கிறார்கள்?'' என்று கேட்டேன்.

"யார் கண்டார்கள்! பாரதப் பகுதியைச் சேர்ந்த எல்லா ஆண்-பெண்களுமே இப்படித் தான் இருக்கிறார்கள். இச்சைகளைத் துறந்து புலன்களை அடக்கி வாழ்ந்து வந்ததனால், இவர்களது சுபாவமே இப்படி விசித்திரமாகி விட்டது. மகாத்மா ரேவடியா அவர்களின் சித்தாந்தங்களைக் கடைப்பிடிக்க முயலும்

பொழுது மேலும் அடங்கி ஒடுங்கி விடுகிருர்கள். 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்ற கொள்கையை அநாதி காலந்தொட்டுக் கடைப் பிடித்து வந்தவர்கள் அல்லவா?'' என்ருன் என் கூட்டாளி.

''பரவாயில்லே. எப்படியும் சீர்திருத்தாமல் காரியம் நடக்காது, பார்! தட்டிக் கொட்டி இவர்களே எப்படியாவது பழைய காட்டுமிராண்டித்தனத்திலிருந்து மீட்டுத்தான் ஆகவேண்டும்!'' என்று எனது அத்தியந்த நண்பரான மகாத்மா ரேவடியாவின் செயல்களே ஆமோதித்தவாறே நடந்தேன்.

இன்னும் அதிகமாக என்ன சொல்வது ? நாங்கள் வெகு நேரம் சுற்றி அலேந்தோம். எங்கு எங்கெல்லாமோ சென்ருேம், சுற்றிப் பார்த்தோம். ரேவடியா சம்பிரதாயம் எட்டுத் திக்கிலும் வெற்றி முரசு கொட்டி ஆட்சி செலுத்துவதாகவே தோன்றியது. என் இருதயம் பூரிப்பிஞல் விம்மியது. அங்கே நான் கண்ட சுவையான இரண்டொரு காட்சிகளே மட்டும் வர்ணித்து விட்டு நான் எனது சொர்க்கப் பிரயாண வரலாற்றை முடித்துக் கொள்வதாயிருக்கிறேன்.

***நா***ன் அங்கே பகவான் சாணக்கியரைப் பார்த்தேன். மிஸ்டர் ரேவடியா அவர்களது போதனேயின்படி அவர் செயலாற்றும் திறனேப் பற்றி—ஆங்கிலத்தில் Efficiency என்று சொல்கிருர்களே, அதைத் தான் சொல்கிறேன்-படித்து ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருந்தார். பாரதத்தின் வரலாற்றிலே ஆற்றல் மிக்கவர் என்று மங்காப் புகழ் பெற்ற சாணக்கியர், தமது வாழ்

நாள் முழுவதையும் மௌரிய சாம்ராஜ்யத்தை நிலை நாட்டுவதிலே ஈடுபடுத்திய சாணக்கியர், தமது ஆற்றலை யெல்லாம் 'அது ஒரு ஆற்றலா? குப்பையில் போடு' என்று கூறித் தமது செயலாற்றும் திறனிலே தற்கால முறையைக் கடைப்பிடிக்க முனைந்திருந்தார்; தற்கால முறைக்கே தலை சிறந்த ஸ்தானம் கொடுத்துக் கொண் டிருந்தார். இக் காட்சியை நான் எனது இந்தக் கண் களாலேயே கண்டேன்.

அவர் மான் தோலை ஒரு ஒதுப்புறத்தில் விட்டெ றிந்து விட்டு, மேஜை நாற்காலியை ஏற்றுக் கொண்டிருந் தார். ஆனால் பத்மாஸனத்தில் உட்கார்ந்து பழக்கப்பட்டுப் போயிருந்ததனால், நாற்காலியிலும் பத்மாஸனத்திலேயே அமர்ந்திருந்தார். வேஷ்டி உடுத்து வதனால் செயலாற்றுவதிலே சில சங்கடங்கள் ஏற்படு கின்றன என்பதற்காகப் பாண்டும் பூட்ஸும் அணிந் திருந்தார். தலைமுடி வைத்திருப்பதனால் ஒரு அலட்சிய பாவம் உண்டாகி விடுகிறது என்பதை அறிந்து அதைப் மறைப்பதற்காகத் தொப்பி அணிந்திருந்தார். ஆகா! ஆகா! அவரது அந்த வேஷத்தின் அழகை என்ன வென்று சொல்வது?

எங்கள் கொள்கையின் வெற்றிக்கு முரசு எட்டுத் திக்கும் கொட்டிக் கொண்டிருந்தது. எங்கள் கொள் கையின் ரகசியம் என்ன?

மனிதன் மேஜை நாற்காலி போட்டுக் கொண்டு உட்காராத வரையில், பூட்ஸும் பாண்டும் போட்டுக் கொள்ளாத வரையில், தலையிலே தொப்பி வைத்துக் கொள்ளாத வரையில், அவனிடம் செயலாற்றும் திற

மையும் சாமாத்தியமும் வராது என்பது தான். மகாத்மா சாணக்கியருக்கு இந்த விஷயம் முன்பே தெரிந்திருக்குமானல், இவற்றை அணிந்து கொண்டு, பாரத தேசத்தில் மட்டுமின்றி ஆசியா கண்டம் முழுவதிலுமே மௌரிய சாம்ராஜ்யத்தை நிலைநாட்டி, அதன் கொடியைப் பறக்க விட்டிருப்பார். அதன் பின்னரே மறு காரியம் பார்த்திருப்பார்.

இவற்றையெல்லாம் விட உள்ளத்தில் தைக்கக் கூடிய ஒரு சம்பவத்தை நான் இன்னொரு இடத்திலே கண்டேன். ஏழெட்டுப் பேர் கும்பலாகக் கூடி உட்கார்ந்திருந்தார்கள்.

நான் என் தோழனைப் பார்த்துக் கேட்டேன்: "ஏன் அப்பா ! இவர்கள் எல்லோரும் யார் ? அதோ அந்த நீண்ட தாடியுள்ள பெரியாரை மட்டும் தான் எனக்குக் கொஞ்சம் கொஞ்சம் நினைவிருக்கிறது !" என்றேன்.

" ஆம்! அவர்தான் முகலாயர்களின் கொட்டத்தை அடக்கிய சிவாஜி மன்னர். கையிலே கோடரியும், இடுப்பிலே மரவுரியும் தரித்திருப்பவர் பரசுராமர். அடுத்தாற் போல் இருப்பவர் யூனனி ஆட்சியை முறியடித்து வெற்றி வாகை சூடிய மன்னர் சந்திரகுப்த மௌரியர். இவருடைய கதைதான் நாற்றிசையிலும் பரவியிருக்கிறது. அதோ மரத்தடியிலே அமர்ந்திருப்பவர் தான் மகாராஜாதி ராஜ ராஜரான ஸ்ரீ ஹர்ஷர் !"

"அப்படியா ? அந்தத் துறவி அவர்களிடம் இவ்வளவு ஆவேசத்தோடும் ஆக்ரோஷத்தோடும் என்ன சொல்லிக் கொண்டிருக்கிருர் ?" என்று கேட்டேன்.

"துறவிக் கோலத்தில் இருப்பவர் யார், தெரியுமா? அவர் தான் மகாத்மா ஜடபரதர். புவியிலே நெளியும் சின்னச் சின்னப் புழுக்கள் மீது எங்கேயாவது காலை வைத்து ஜீவஹிம்ஸை ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது என்று எண்ணிப் பூமியிலேயே காலை வைக்கக் கூடக் கூசியவர்!"

"சரி, அவர் என்னவோ சொல்லிக் கொண்டிருக்கிறார் போலிருக்கிறதே!"

"பார்த்தால் தெரியவில்லை? போர் வீரர்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருக்கிறார்!"

"என்ன உபதேசம்?"

"பரதர் புது மார்க்கத்தைப் பின் பற்றியிருக்கிறார். பாரத மக்கள் பயங்கொள்ளிகளாகவும் பித்துக்குளிகளாகவும் இருக்கிறார்களாம். காய்கறி கீரையைத் தின்று திறனற்றவர்களாக வாழ்கிறார்களாம். எல்லோரும் மாமிச உணவு அருந்த வேண்டும். அப்பொழுதுதான் தைரியமும் துணிவும், வீரமும் சூரமும் வரும் என்று உபதேசித்துக் கொண்டிருக்கிறார்" என்று விளக்கினான் கூட்டாளி.

எனக்கு எல்லாம் உள்ளங்கை நெல்லிக் கனி போல் விளங்கி விட்டது.

"அப்படியா! பேஷ், பேஷ்! ரேவடியா! நான் உங்களை எப்படித் துதிப்பது?" என்று கூறியவாறே அங்கிருந்து புறப்பட்டேன்.

சற்றுத் தொலைவில் நான் பகவான் புத்தரைப் பார்த்தேன். அவரும் ரொம்ப ரொம்பச் சீர்திருந்திப்

போயிருந்தார். அவர் ஒரு நோயாளியிடம் சொல்லிக் கொண்டிருந்ததை நான் எனது இந்தக் காதுகளா லேயே கேட்டேன். அவர் சொன்னதாவது :

"அப்பா! இது உன் வினை. இதை நீ அநுபவித்துத் தான் ஆகவேண்டும். படு, படு, துயரப்படு; கஷ்டப் படு. அதை விட்டால் வேறு வழியில்லை. உலகத்தின் நியதிப்படி வாழத் தெரிந்தவர்கள் தான் வாழ முடியும். தகுதியுள்ளவர்கள் தான் ஜீவிக்க முடியும். பலமுள்ளவர் கள் தான் பிழைக்க முடியும். தினசரி வாழ்க்கையைப் பார்த்தால் தெரியும். அடிதடி நடக்கிறது; பலப் பரீட்சை நடக்கிறது; இழுபறிப் போர் நடக்கிறது. வலுவுள்ளவன் வெற்றியடைகிறான்; வலுவில்லாதவன் சாகிறான்."

பகவான் புத்தரது வாயிலிருந்து டார்வினின் கொள்கைகள் உதிர்வதைக் கண்ட எனக்கு, பகவான் புத்தர் கட்டாயம் மிஸ்டர் ரேவடியாவிடம் உபதேசம் பெற்றிருக்க வேண்டும் என்பது ஐயந்திரிபுக்கிடமின்றி விளங்கி விட்டது.

இப்படிச் சுற்றிக் கொண்டே வந்தவனுக்குக் கடை சியாகக் காணக் கிடைத்த அநுபவம் அதி அற்புதமான தாகப்பட்டது; என்றென்றும் மறக்க முடியாததாகத் தோன்றியது. நவீன யுகத்தின் புதுக் கொள்கைகள் சொர்க்கலோகத்தில் எப்படிப் பரவியிருக்கின்றன என் பதைக் காணும் பொழுது எனக்குச் சொல்ல இயலாத வியப்பே உண்டாயிற்று.

ஒழு வலுவிழந்த நோயாளி கட்டாந் தரையில் கிடந் தான். மரவுரி தரித்த ஒரு யுவதி. குதிகால் உயர்ந்த

செருப்பு அணிந்து, பிரேம் இல்லாத, விழிகளை மறைக்கும் மூக்குக் கண்ணாடி போட்டுக் கொண்டு வெகு கோபத்துடன் பெண் நாகமெனச் சீறியவாறு நின்றாள்.

"சதி! நான் இனி பிழைக்கமாட்டேன். தாகமாயிருக்கிறது. குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடேன்!" என்றான் வலுவிழந்த நோயாளி வாலிபன் மிகவும் தைன்யமான குரலில்.

"தண்ணீர், தண்ணீர் என்று தொந்தரவு செய்கிறாயே! சாகும் பொழுதாவது அமைதியாக சாகக் கூடாதா, சத்தியவான்? நீ தான் நோயாளி ஆயிற்றே! எதற்காகக் கல்யாணம் செய்து கொண்டாய்? என் தேவையைப் பூர்த்தி செய்யும் சக்தி உனக்கு இல்லையென்றால், நாரதரை ஏன் என்னிடம் அனுப்பினாய்? உன்னைப் போன்ற உதவாக்கரைக்கு ஒரு பெண்டாட்டியை மணந்து கொள்ளும் உரிமை ஏது?"—கைகளை ஆத்திரத்துடன் ஆட்டி ஆட்டிக் கேட்டாள் சாவித்திரி.

"சாவித்திரி! நடந்தது நடந்து விட்டது!"—மரணத்தின் வாயில் சிக்கி விட்ட சத்தியவான் மிகுந்த கஷ்டத்துடன் கூறினான். "இவ்வேழைமீது கொஞ்சம் தயவு பண்ணு, சாவித்திரி. நீ சொல்வதை நான் கேட்கிறேன். என்ன இருந்தாலும் நான் உன் கைபிடித்த கணவன் அல்லவா?" என்றான்.

"அதற்காக என்ன? நான் ஒன்றும் உன் அடிமை இல்லையே! உன் சுயநலத்துக்காக என் வாழ்க்கையை இப்படிப் பாழாக்க உனக்கு ஏது உரிமை? சரி, தொலைந்துபோ! குடிக்கத் தண்ணீர் தருகிறேன்.

ஆனால் ஒரு நிபந்தனை. உன்சொத்து முழுவதையும் என் பெயருக்கு எழுதி வைத்துவிட வேண்டும். என்ன சொல்கிறாய் ?'' என்றாள் சாவித்திரி.

''சாவித்திரி ! இதுவா உயில் எழுதும் நேரம் ? தண்ணீருக்காக ஆலாய்த தவிக்கிறேன். உயிரே போய்விடும் போலிருக்கிறது. முதலில் தண்ணீர் தா, சாவித்திரி !'' என்றான் சத்தியவான்.

இதற்குள் யமதர்ம ராஜன் அங்கே தோன்றி விட்டான். உடனே சத்தியவானைக் கை விலங்கிட்டுப் பிடித்துக் கொண்டும் விட்டான். சாவித்திரியும் மோசம் போய் விடக்கூடாது என்ற வேகத்தில் சத்தியவானின் கால்களைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டாள்.

''அம்மணி ! என்ன காரியம் செய்கிறீர்கள் ? சாகும் மனிதனை இப்படிப் பிடித்து இழுக்கிறீர்களே, நியாயமா? காலை விட்டு விடுங்கள்! உங்கள் கணவனை மரணம் *சமீ*பித்து விட்டது !'' என்றான் யமதர்மன்.

'' காலை விடுவதா ? அது எப்படி ? எத்தனை நாழிகையாகச் சொல்லிக் கொண்டிருக்கிறேன் ! இவர் காதில் வாங்கிக் கொண்டால் தானே ? இவர் தம் சொத்தை என் பெயருக்கு உயில் எழுதி வைக்காத வரையில் நான் இவரை விடமுடியாது. எங்கே போனாலும் நான் இவர் காலைப் பிடித்துக் கொண்டே கூடக் கூட வருவேன்!'' என்றாள் சாவித்திரி.

''உங்களுக்கு வேறு ஏதாவது வேண்டுமானால் கேளுங்கள். நான் தருகிறேன். ஆனால் இவனை விட்டு விடுங்கள். எனக்கு நேரமாகிறது!'' என்றான் யமதர்மன்.

"அப்படியானால் எனக்கு இவரைக் காட்டிலும் அதிக அழகான, வலுவுள்ள கணவனை..."

இமை மூடி இமை திறக்கும் நேரத்துக்குள் யம தர்மராஜன் கண்பார்வையிலிருந்து மறைந்து விட்டான். சாவித்திரி சத்தியவானும் கூட மறைந்து விட்டார்கள்.

* * *

**நான்** என் வீட்டு வராந்தாவில் கட்டிலில் படுத்திருந்தேன். ஒரு குட்டித் தூக்கத்துக்குப் பிறகு அப்பொழுதுதான் கண்விழிப்புக் கொடுத்திருந்தது.

அந்தத் தூக்கத்துக்கிடையே கண்ட கனவில், நான் சொர்க்கத்துக்குப் போனேன். மகாத்மாக்களைச் சந்தித்தேன். இந்த விஷயத்தில் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி. எங்கு பார்த்தாலும் ரேவடியா சம்பிரதாயத்தின் வெற்றி முழக்கமே கேட்டது. பூலோகத்தையும் ஒரு நோட்டம் விட்டேன். மிஸ்டர் ரேவடியா போன்ற அருந்தவப் புதல்வர்கள் தங்கள் முன்னோர்களைக் காட்டிலும் எத்தனையோ சீர்திருந்திக் கொண்டிருந்தார்கள், முன்னேறிக்கொண்டிருந்தார்கள்.

# சாமல்ஷாவின் திருமணம்

அன்பார்ந்த நேயர்களே! சிறிது தாழ்ந்த குரலில் இந்தத் தலைப்பைப் படித்துவிட்டு, நீங்கள் புலமை என்னும் படி ஏறிப் பெருங்காப்பியம் படிக்கப் போவதாகக் கனவு காண்பீர்களானால், கவி ரத்னம் என்று மூவுலகத்தோராலும் பாராட்டப்படும் நரசிம்மரின் புதல்வரது வரலாற்றை அறிய ஆசை கொண்டீர்களானால், பக்திச் சுவையைப் பருக ஆண்டவனின் திருநாமத்தைச் செவிமடுக்கும் பேறைப் பெற விரும்புவீர்களானால், தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள், எனது இந்தப் படைப்பைத் தாங்கள் மூட்டை கட்டி ஒரு ஓதுப்புறத்தில் வைத்துவிட வேண்டியதுதான்.

நான் புலவர் பெருமக்களின் வரிசையிலே என் பெயரைப் பிராபல்யப்படுத்த விரும்பவில்லை; அப்பாவிச் சொற்களை அக்கு அக்காகப் பிரித்துச் சித்திரவதை செய்யும் பணியை ஏற்கவும் விரும்பவில்லை. கதிரவனின் ஒளி புகாத காரிருளிலே கவியாகிப் புகுந்து களி நடம்புரிய விரும்பவில்லை. பக்தனாகிச் சொர்க்கம் சென்று, அங்கே நித்திய வாசம் புரியும் முப்பத்து முக்கோடி தேவர்களையும் கண்டு தலைவணங்கித் துலைவணங்கிக் கருத்துக்குக் கஷ்டம் கொடுக்கவும் விரும்பவில்லை.

நான் சொல்லப் போவது ஒரு சாதாரண சிறிய விஷயம். சுற்றி வளைத்துச் சொல்ல வேண்டிய தேவையே இல்லாத விஷயம். விஷயம் சாதாரண

மாக இருந்தாலும். அதன் பெருமைக்கு ஒரு குறைவும் இல்லை. நரசிம்ம மேத்தா என்ன பெரிய புண்ணியம் செய்து விட்டார்? நமது சியாமல்ஷா என்ன குற்றஞ் செய்து விட்டார்? அப்படியிருக்கும் பொழுது ஒரு விஷ யத்தின் அருமை பெருமைகளை நாமாகக் குறைப் பானேன்?

இதுவோ மக்கள் ஆட்சி மாண்புற நடைபெறும் காலம். ஏழைப் பிச்சைக்காரன் பெரும் பெரும் பண மூட்டைகளுக்கு நிகராக வரமுக் கூடிய காலம். சாரா யம் அருந்தி அதன் போதையிலே தடுமாறித் தள்ளாடி விழும் கூலிக்காரர்களின் சிந்தனைப் போக்கைக் கொண்டு, கிளாட்ஸ்டனைப் போன்றவர்களின் தகுதி யும் புலமையும் எடைபோடப்படுகிறது என்றால், நமது சியாமல்ஷாவுக்கு என்ன குறைவு? நரசிம்ம மேத்தா வின் பிள்ளையான சியாமல்ஷா அவர்களுக்கு இணை யாக மாட்டாரா, என்ன?

சென்ற மாசி மாதம் நான் பம்பாயிலிருந்து அஹமதாபாத்துக்குப் போய்க் கொண்டிருந்தேன். என்ன வேலையாகவா? இதற்குப் பதில் சொல்ல வேண்டியது அநாவசியம். வண்டியில் என்னோடு எனது பழைய நண்பர் ஒருவரும் உட்கார்ந்திருந்தார். வெகு நேரம் வரை நாங்கள் வம்பு அடித்தோம். வெற் றிலை போட்டுக் கொண்டோம். பழைய புதிய விஷயங் களைக் கிளறி மூடிக் கிண்டிக் கொட்டிக கேலி செய்து கொண்டிருந்தோம். என் நண்பர் பஞ்சு வியாபாரம் செய்து கொண்டிருந்தார். அதனால் அவர்களணிந் திருந்த உடைகளுக்கு ஓர் குறைவில்லை.

கொஞ்சம் கொஞ்சமாக வண்டியின் வேகம் மெதுவாகி, ஒரு ஸ்டேஷனில் நிற்க முஸ்தீப்பு செய்து கொண்டிருந்தது. எனவே, என் நண்பரிடையே யும் விசித்திரமானதொரு மாறுதல் உண்டாயிற்று. கொக்கின் சிறகுபோன்ற நேர்த்தியான வேட்டி, கஞ்சி அதிகம் போடப்பட்டு மொறமொற வென்று இஸ்திரி செய்திருந்த முழங்கால்வரை நீண்ட சட்டை, சரிகையில் உருத்திராக்ஷக் கரை போட்ட அங்க வஸ்திரம், சிவந்த குஸும்பா நிறத் தலைப்பாகை ஆகியவை ஒவ்வொன்ருகப் பெட்டிக்குள்ளிருந்து வெளிவந்தன. சிறிது நேரத்துக்கெல்லாம் அவை காண்டாபாயி என்னும் பெயர் கொண்ட எனது அந்த நண்பரின் தேகத்தையும் அலங்கரித்தன.

"ஏன், காண்டா பாயி! பாம்பு சட்டை உரிப்பது போல், தாங்களும் சட்டை உரிக்கிறீர்களே; என்ன விஷயம்?" என்று கேட்டு வைத்தேன்.

"அதுவா? இந்தக் கிராமத்திலே ஸேட் சாமல்ஷா என்று ஒரு நண்பர் இருக்கிருர். அவருக்குக் கல்யாணம். எங்கள் இருவருக்கும் வியாபார விஷயமாகத் தொடர்பு ஏற்பட்டு இருவரும் நெருங் கிய நண்பர்களானேம். இன்றைக்கு நான் வேறு, அவர் வேறு இல்லையென்ருல் பார்த்துக் கொள்ளுங்க ளேன். அது போகட்டும், நீங்களும்தான் கல்யாணத் துக்கு வாருங்களேன்!" என்ருர் காண்டா பாயி.

"யார்? நானு?" ஆச்சரியத்துடன் கேட்டேன்: "எனக்கு உங்கள் ஸேட்டைத் தெரியக்கூடத்

8

தெரியாதே ! இன்றுதானே அவருடைய பெயரையே கேள்விப்பட்டிருக்கிறேன் !'' என்றேன்.

" அதனால் என்ன ? இஷ்டமித்திர பந்துக்களுடன் வந்திருந்து விவாகத்தை நடத்தி வைக்குமாறு தான் ஸேட்ஜி அழைப்பிதழ் அனுப்பியிருக்கிறாரே ! வாருங்கள், போய் வருவோம். ஆனந்தமாகப் பொழுதைப் போக்கிவிட்டு வரலாம். ஆமாம், அஹமதாபாத்திலே அப்படி என்ன முக்கியக் காரியம் இருக்கிறது ?''

" முக்கியமான காரியம் ஒன்றும் இல்லை. இருந்தாலும் அநாவசியமாகப் பிறர் வீட்டுக்கு......''

" பிறர் வீடாவது, மண்ணாங்கட்டியாவது ? அவர் நம் ஆசாமி, சார் ! நமக்கு ரொம்ப ரொம்ப வேண்டியவர். நான் நண்பர் ஒருவரோடு வந்திருக்கிறேன் என்றால் சந்தோஷப்படுவார். அதோடு தாங்களும்தான் என்ன தொலையாத நேரம் தங்கப் போகிறீர்கள் ? இன்று சாயந்திரம் திருமணம். நாளைக் காலையில் திரும்பிவிடப் போகிறீர்கள். வாருங்கள், இடக்கிறது !'' என்று பிடிவாதம் பிடித்தார் நண்பர்.

" உம் '' என்று ' உம் ' கொட்டிய நான் என்ன செய்யலாம் என்று யோசனையில் ஆழ்ந்தேன். அதற்குள் வண்டி ஸ்டேஷனில் வந்து நின்று விட்டது. காண்டாபாயியை அழைத்துப் போவதற்காக ஆட்களும் வந்துவிட்டார்கள்.

" ரண் சோட் பாயி ! தாங்களும் என்னோடு வாருங்கள். என் நண்பருக்குத் தவறாகவே படாது '' என்று பிடிவாதமாகக் கூறிக் காண்டா பாயி என்னை வண்டியிலிருந்து இறக்கிவிட்டார். நானும் வேறு வழி

யின்றி அழையாத வீட்டு விருந்தாளியாகச் சாமல் ஷாவின் கல்யாணத்தில் கலந்துகொள்ளச் சென்றேன்.

மூட்டை முடிச்சுகளை இறக்கிக் கொண்டு நாங்கள் ஸ்டேஷனைவிட்டு வெளியே வந்தோம். "இந்த வண்டி தங்களுக்குச் சௌகரியமாக இருக்கும்!'' காண்டா பாயியை அழைப்பதற்காக வந்திருந்தவர்களில் ஒரு வன், மாட்டு வண்டி ஒன்றைச் சுட்டிக் காட்டிக் கூறி ஞன். அதில் எங்களுக்கு முன்பே நான்குபேர் உட்கார்ந்திருந்தார்கள். நாங்கள் எங்கே உட்காரு வது? வண்டிக்காரனுக்குப் பக்கத்தில் உட்காரலாமா என்று யோசித்தேன். கடைசியில் எப்படியோ புளி அடைவதுபோல் நாங்கள் ஏழுபேர் அந்த வண்டிக் குள் உட்கார்ந்து விட்டோம். வண்டிக்காரன் கையில் சாட்டையை எடுத்துக்கொண்டு, மாட்டின் வாலை முறுக்கி அதட்டி ஓட்டிஞன். அப்பொழுதும் மாடுகள் அசையாமற்போகவே, அவன் அவற்றுக்குக் கொடுத்த வாழ்த்துரைகளைக் காது கொண்டு கேட்க முடியாது. அடியும் உதையும் வசவும் திட்டும் வாங்கிக்கொண்டு மாடுகள் ஒருவிதமாக ஊர்ந்தன.

நாங்கள் எப்படியோ வண்டிக்குள் அடைந்து உட்கார்ந்திருந்தோம். பிடித்துக்கொள்ளவோ வசதி கிடையாது. பாதையின் பெருமையைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. ஆச்சல் குழிகள் அனந்தம். அந்தக் கட்டை வண்டி அவற்றில் விழுந்து எழுந்தபொழுது நாங் களும் விழுந்து எழுந்தோம். கடவுள் புண்ணியத்திலே மூக்கு உடைபடுவதிலிருந்து தப்பியது என்ருல், ஆண்டவன் அருளிலே மண்டை சிதர்த் தேங்காயா வதிலிருந்து பிழைத்தது. ஆண்டவன் அருள் என்று

சொல்வது கூடத் தவறு. குஜராத்திகளாகப் பிறந்து தலைக்குத் தலைப்பாகை கட்டிக்கொள்ளுவது என்று வைத்துக் கொண்டதன் பலன் என்றுதான் கூற வேண்டும். வண்டிக்குள் ஏற்பட்ட அத்தனை இடிகளை யும் மோதல்களையும் எங்கள் தலைப்பாகைகள் தாங்கிக்கொண்டன. யார் செய்த தவத்தாலோ பிரயா ணம் எவ்வித ரத்தக்களறியும் இன்றி நிறைவேறியது.

கடைசியில் வண்டி ஊரை அடைந்து வீட்டு வாசலை நெருங்கியதும் விருந்தாளிகளாகிய நாங்கள் இறங்க வேண்டிய முறை வந்தது. வண்டி நின்றதும், எங்களை இறக்கிவிட்டு வண்டிக்காரன் போய்விட்டான். எங்களை வரவேற்பதற்காக ஸ்டேஷனுக்கு வந்திருந்த வர்கள் யாரையும் காணோம். அவர்கள் எங்கே மாயமாய் மறைந்து விட்டார்களோ, தெரியாது.

நாங்கள் எங்களது மூட்டை முடிச்சுகளைக் கையில் எடுத்துக்கொண்டு, எங்களை வரவேற்பவர்கள் வருவதற்காகக் காத்திருந்தோம், காத்திருந்தோம்; அப்படிக் காத்திருந்தோம். யாராவது எங்களை நெருங்கி வந்தால்தானே? எங்களுக்கோ எங்கே போவது எந்தப் பக்கம் போவது, என்று ஒன்றும் விளங்க வில்லை. கண்களைக் கட்டிக் காட்டில் விட்டவர்களைப் போல் நின்று கொண்டிருந்தோம்.

எதிர்வீட்டிலிருந்து பலர் தலைப்பாகை அணிந்து கொண்டு, நன்ருக உடை உடுத்திக்கொண்டு வெளியே வந்தார்கள். அவர்களில் ஒருவராவது எங்க ளுக்குக் கொஞ்சமாவது முன்பின் அறிமுகமானவர் களாக இருக்க வேண்டுமே? அதுதான் இல்லை.

"ஏன் காண்டா பாயி! எத்தனை நேரம் இது போல் தவம் கிடக்க வேண்டும்? இந்த மூட்டை களின் சுமையினுல் கை இற்றுப்போய்க் கொண்டிருக் கிறதே! வீட்டுக்குள் நாமாகவே ஏன் போகக் கூடாது?" என்று கேட்டேன்.

அத்தனைநேரமும் செய்வதறியாது 'திரு திரு' வென்று விழித்துக் கொண்டு நின்ற காண்டா பாயி, "ஆமாம், ஆமாம்! ஏன் போகக் கூடாது? வாருங் கள். வாருங்கள்!" என்ருர். யாருமே வரவேற்கா தது எங்கள் இருவருக்குமே அவமானமாகத்தான் இருந்தது. "ஏண்டா வந்தோம்?" என்ற எண்ணம் எங்கள் இருவரையும் வாட்டாமல் இல்லை. இருந்தா லும் உரலில் தலையைக் கொடுத்துவிட்ட பின் உலக் கைக்குப் பயந்தால் கட்டி வருமா? கனைத்துக்கொண்டு இருவருமே வீட்டுக்குள் நுழைந்தோம்.

வீட்டுக்கூடத்தில் ஆறு ஏழுபேர் ஒரு ஊஞ்லில் உட்கார்ந்து கொண்டு, ஹஹ்ஹா, ஹிஹ்ஹீ, ஹூஹ் ஹூ என்று சிரித்துக்கொண்டு ஏதோ பாட்டும் பாடிக் கொண்டிருந்தார்கள். நான்கைந்துபேர் கூடத்தி லேயே ஒரு பெருஞ் சமுக்காளத்தை விரித்துக்கொண்டு பகல் தூக்கம் போடப் பிரயத்தனம் செய்துகொண் டிருந்தார்கள். நாங்கள் எங்கள் மூட்டை முடிச்சு களைக் கூடத்தின் ஒரு மூலையில் வைத்துவிட்டுத் தங்கு வதற்கு வசதியான இடம் தேடுவதில் இறங்கினேம்.

பக்கத்தில் இருந்த சிறிய அறையில் ஐந்தாறுபேரு டைய சாமான்கள் கிடந்தன. மேல் மாடியிலே இருபது முப்பது பேர் தங்கியிருந்தார்கள். அவர்களில்

சிலர் வம்பு அடித்துக் கொண்டிருந்தார்கள். சிலர் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். சிலர் தூங்கி வழிந்து கொண்டிருந்தார்கள். வீடு முழுவதும் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்துவிட்டோம். ஒருவர் படுக்கக் கூட எங்கும் இடத்தைக் காணவில்லை.

கடைசியில் நாங்கள் மீண்டும் கீழே இறங்கி வந்தோம். முன்னால் பார்த்த அந்தச் சிறிய அறைக்குள்ளேயே நுழைந்தோம். அங்கிருந்தவர்களில் யாரும் எங்களுடன் வார்த்தை ஆடவில்லை.

" காண்டா பாயீ! இங்கு எல்லோரும் நம்மைப் போலவே வாடகைக் குதிரைகளாக, திண்ணைச் சோற்றுத் தடிராமன்களாகத்தான் எனக்குத் தோன்றுகிறார்கள்!" என்றேன்.

" ஆமாம், ஆமாம்!" என்று ஏதோ கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமே என்று கடனுக்குப் பதில் சொல்லிவிட்டுக் காண்டா பாயி மௌனம் சாதித்தார். பாவம், அவர்தான் என்ன செய்வார்? எனக்கு அவரிடம் அனுதாபமே தான் உண்டாயிற்று.

" அப்படியானால் ஒரு காரியம் செய்வோம். நமது சாமான்களையெல்லாம் இந்த அறையிலேயே வைத்துக்கொண்டு நாமும் இங்கேயே தங்கிவிடுவோம். எல்லோரும் நம்மைப்போன்ற வாடகைக் குதிரைகள் தானே? யாரும் எதுவும் கேட்கமாட்டார்கள், சொல்லமாட்டார்கள்!" என்று சொல்லிவிட்டு, ஒருவர் படுக்கை, இன்னொருவர் பெட்டி, மற்றொருவர் பை எல்லாவற்றையும் எடுத்து ஒரு மூலையில் போட்டேன். எங்கள் இருவருக்கும் வேண்

டிய இடத்தை ஒழித்துக் கொண்டேன். வெளியே உட்கார்ந்திருந்தவர்கள் அதைக் கண்டு ஓடோடி வந்தார்கள். ஏதாவது ரகளை நடக்க ஹேதுவாகி விடுமோ என்று கூட நான் பயந்தேன். ஆனால் அப்படியொன்றும் நடக்கவில்லை. எங்கள் துணிச்சலைக்கண்ட அவர்கள், நாங்கள் அதிக உரிமை உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்து எங்களுக்கு இடம் அளித்து விட்டார்கள்.

அப்புறம் காண்டா பாயியைக் கலந்து ஆலோசித்துக் கொண்டு, வயிற்று வழிபாட்டுக்கும் நான் இந்த முறையையே கையாள முற்பட்டேன். அதற்கு முதலில் ஒரு ஆசாமியைத் தேடிப் பிடித்தேன். அருகில் உள்ள கட்டிலேயே சமையலுக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. எதிரே இருந்த கிணற்றங் கரைக்குச் சென்று நாங்கள் ஸ்நானத்தை முடித்துக் கொண்டோம். பிறகு யாருடைய அழைப்பையும் எதிர்பாராமல் சமையற்கட்டுக்குச் சென்று சாப்பிட உட்கார்ந்து விட்டோம்.

அந்த இடத்தில் எங்களுக்கு முன்னாலேயே இருபது இருபத்தைந்து பேர் சாப்பிட்டு எழுந்திருந்தார்கள். வட்டிலில் இருந்த சாதத்தைப் பார்த்தாலே குலை நடுக்கம் எடுத்தது. பதமே ஆகாமல் அரிசி அரிசியாக இருந்தது. பருப்பு; பருப்பா அது! ஓட ஓடத் தண்ணீராக் இருந்தது. கறியைப்பற்றியோ கேட்கவே வேண்டாம். கறி கரியாகக் காந்திப்போயிருந்தது. வாயில் வைக்க வகையில்லை. நெய்யின் நாற்றமோ எட்டு ஊரைக் கூட்டியது. அந்த நெய்தான்

லட்டு பக்ஷணம் செய்ய உபயோகிக்கப் பட்டிருந்தது. இத்தகைய பஞ்ச பக்ஷ பரமான்ன உணவை எப்படியோ வயிற்றுக்குள்ளே தள்ளினோம். அப்பொழுது கைக்கும் வாய்க்கும் நிகழ்ந்த போரைக் காணக் கண் கோடிதான் வேண்டும். ஒருவிதமாக ஆகாரத்தை முடித்துக் கொண்டு நாங்கள் தங்கியிருந்த இடத்துக்குத் திரும்பி வந்தோம்.

அப்புறம் காண்டாபாயி என்னைத் தமது நண்பரான ஸேட் சாமல் ஷாவிடம் அழைத்துச் சென்றார்.

சாமல் ஷா நல்ல பருமனான தேகம் படைத்தவர். முதிர்ந்த பிராயத்தினர். கருநிறமேனி படைத்தவர். தொந்தியும் தொப்பையும் நிறைந்த பெரிய மனிதர். அவருடைய கருநிறத்தின் பளபளப்பைப் பார்த்தால், ஒருமுறை வார்னிஷ் அடிக்கப்பட்டிருக்குமோ என்று எண்ணும்படியாக இருந்தது. அழகு சாதனங்கள் அனைத்தும் அவரது திவ்ய சரீரத்தை அலங்கரித்தன. அவரது வதனத்திலே இன்பத்தின் ரேகை இழையோடிக் கொண்டிருந்தது. கையில் கண்ணாடியை வைத்துக்கொண்டு அவர் தமது மீசை மயிரைப் பார்த்துக்கொண்டிருந்தார். ஏனென்றால் அப்பொழுது தான் நாவிதன் அவரது மீசைக்குக் கறுப்புச் சாயம் பூசிச் சென்றிருந்தான்.

"அடேடே! யார்? காண்டாவா? வா, அப்பா, வா! நீ வராததுதான் ஒரு பெருங்குறையாக இருந்தது!" என்று வரவேற்றார் ஸேட் சாமல் ஷா.

"அடடா! என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள்? நான் என்ன பெரிய மனுஷ்யனா?—இவர் என்

நண்பர். ரண் சோட்பாயி என்று பெயர்!" என்று என்னை அறிமுகம் செய்து வைத்தார் காண்டாபாயி.

"வரணும், வரணும்! உலகத்திலே இப்பொழுது நல்ல மனிதர்கள் யார் இருக்கிறார்கள்? ஏதோ ஆண்டவனுடைய அருள், ஒருவிதமாக உலகம் ஓடிக்கொண்டிருக்கிறது. இதற்கு முன்னால் எனக்குக் கல்யாணம் நடந்தபொழுது, எண்ணிப் பன்னிரண்டு பேர்கூட இந்த வீட்டுக்கு வரவில்லை என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்! அந்த மனைவி உயிர் வாழ்வதைக் காட்டிலும் இறந்துபோனதே எத்தனையோ மேலாகிவிட்டது!" என்று ஸேட் தமது முதல் மனைவியை ஞாபகப்படுத்திக் கொண்டார். டாக்டர் தம்மிடம் வைத்தியம் பார்த்துக் கொண்டு செத்துப்போன நோயாளியை எப்படி ஒரு பற்றும் இல்லாமல் நினைப்பாரோ, அப்படித்தான் இருந்தது ஸேட் சாமல் ஷாவின் பேச்சு.

"உண்மையான வார்த்தை! ஏன் ஸேட்ஜி, கல்யாணம் இந்தத் தடவையும் சாயந்திரம் தானே?" என்று கேட்டார் காண்டாபாயி.

"இந்த சமர்த்த ஜோஷிக்குப் படித்துப் படித்து எத்தனையோ தடவை சொல்லிவிட்டேன். கேட்டால் தானே? ஒவ்வொரு தடவையும் இப்படித்தான் ஏதாவது சாக்குச் சொல்லித் தாமதமாக்கி விடுகிறார்!" என்றார் ஸேட் சாமல்ஷா.

சமர்த்த ஜோஷி சற்றுத் தொலைவில் உட்கார்ந்து தமது தக்ஷிணையை எண்ணிக் கொண்டிருந்தார். அவர் தலைதூக்கி ஒருமுறை பார்த்துவிட்டு, "ஸேட்ஜி!

இதெல்லாம் என் கைக்குள் அடங்கிய விஷயமா? வேளை வரவேண்டாம்? இருந்தாலும் பார்க்கிறேன் சோதித்து. ஒருதடவை தவறு நேர்ந்துவிட்டால் நேர்ந்ததுதானே? அப்புறம் திருத்த முடியுமா?'' என்ருர்.

"ஏன், சமர்த்த ஜோஷி! இப்பொழுது எனக்கு நடக்கப்போவது ஐந்தாவது கல்யாணம். இன்னும் எனக்கு எத்தனை கல்யாணங்கள் பாக்கியிருக்கின்றன? ஜாதகத்தைப் பார்த்துச் சொல்லுமேன்!'' என்று கேட்டார் ஸேட்சாமல் ஷா.

"ஸேட்ஜி! இப்படியெல்லாம் அபஸவ்யமாய்ப் பேசக்கூடாது. தலையில் எழுதிய எழுத்து எப்பொழுதாவது பொய்க்குமா?''

இலேசாகப் புன்முறுவல் பூத்தவண்ணம் சமர்த்த ஜோஷி கேட்டார்.

இதற்குள் வெளியே சூரத்திலிருந்து தருவிக்கப் பட்டிருந்த பாண்டுக்காரர்கள் வந்துவிட்டார்கள். அவர்கள் அடித்த டமாரம் காதுகளின் டமாரத்தைப் பிய்த்தது. நாங்கள் ஸேட்டிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு எழுந்து வெளியே வந்து விட்டோம்.

"ஏன் காண்டாபாயி! ஸேட்ஜிக்கு என்ன வயதிருக்கும்?'' என்று கேட்டேன்.

"ஐம்பதுக்குக் குறைவில்லை. ஒன்று இரண்டு மேலேயே இருக்கலாம். இது ஒன்றும் அதிக வயதில்லையே! இவருடைய அப்பா தமது அறுபதாவது வயதிலே குதிரை ஏறினுர்!'' என்ருர் காண்டாபாய்.

"குதிரை ஏறினுரா? அப்படி என்ருல் என்ன அர்த்தம்? சற்று விளங்கத்தான் சொல்லுங்களேன்!''

" குதிரை ஏறுவது என்றால் குஜராத்திலே கல்யாணம் செய்து கொள்வது என்று அர்த்தம்!"

" அப்படியா சமாசாரம்! ஸேட் சாமல் ஷா அப்பனுக்குப் பிள்ளை சனேயில்லை என்ற நிலைமையையே இன்னும் அடையவில்லையே! அப்பனுக்கு மிஞ்சிய பிள்ளை என்ற பெயரை அதற்குள் எங்கே வாங்கப்போகிறார்? ஆண்டவன் சோதனை செய்யக் கூடாது. இந்த மனைவிக்கு ஏதாவது நேர்ந்து விட்டால், தமது முன்னோர்களின் மரியாதையைக் காப்பாற்றுவதற்காகவாவது ஸேட்ஜி இன்னொரு கல்யாணம் செய்து கொள்ளாமல் விடமாட்டார். அப்படித் தானே?" என்று கேட்டேன்.

"இப்பொழுதே என்றால் சோதிடம் கூறமுடியுமா? அந்நிலை ஏற்பட்டால் அல்லவா தெரியும்!"

" அதுபோகட்டும். மணப்பெண்ணுக்கு என்ன வயதிருக்கலாம்?" என்று கேட்டேன் நான்.

" இருக்கும் ஐந்தாறு. இந்த ஊர் தேசாய் ஒருவருடைய பெண்தான். குடும்பம் எத்தனையோ உயர்ந்த குடும்பம்தான். ஆனால் தேசாய் பெரிய சம்சாரி!"

" அப்படியா?" என்றவன் மேலே பேசத் தோன்றாமல் மௌனம் சாதித்தேன்.

நாங்கள் இருவரும் தங்கியிருந்த விடுதிக்கு வந்து உடைமாற்றிக் கொண்டோம். நானும் ஜரிகைத் தலைப் பாகை முதலியவை அணிந்துகொண்டு, ஸேட்ஜியின் மதிப்பை உயர்த்தும் பணியில் இறங்கினேன். ஜம்மென்று உடை அணிந்துகொண்டு நாங்கள் இருவரும் ஸேட்ஜியின் வீட்டை அடைந்தோம்.

மாப்பிள்ளை அழைப்புக்காகக் குதிரை நின்று கொண்டிருந்தது. இடத்துக்கு இடம் சம்பிரதாயம் வேறுபடுகிறது. சில இடங்களில் மைனப் பல்லக்கு, சில இடங்களில் குறவன் பல்லக்கு உபயோகிக்கிருர் கள். அதேபோல் குஜராத்திலும் ராஜஸ்தானத்திலும் மாப்பிள்ளை குதிரை ஏறிச் செல்வது வழக்கம். அந்தச் சம்பிரதாயத்தை ஒட்டித்தான் வாசலில் குதிரை கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருந்தது.

ஹைதர் அலி காலத்து நாடகக் கம்பெனியினர் கட்டிக் கிழித்த உடையிஞல் தங்களை அலங்கரித்துக் கொண்டு பாண்டுக்காரர்கள் காது செவிடுபடத் தங்கள் வாத்தியங்களை முழக்கிக் கொண்டிருந்தார்கள். இன்ெனுரு புறத்தில் நாட்டுக் கோஷ்டியும் தன் கைவரிசையைக் காட்டிக் கொண்டிருந்தது. இன்னும் பற்பல விதமான வாத்தியக்காரர்கள், அவர் அவர் இச்சைப் படி சங்கீதத்தைக் கொலை செய்து கொண்டிருந்தார் கள். இரண்டு கோமாளிகள் நாதஸ்வர இசைக்கேற்பக் குதித்துக் கூத்தாடிக் கொம்மாளம் அடித்துக்கொண் டிருந்தார்கள். மக்களின் கூட்டத்தைக் கவனித்த எனக்கு, நம் மக்களிடையே இன்னும் நாட்டுப்பற்று நீங்காமல் இருக்கிறதே என்ற எண்ணம் தோன்றியது. நமது நாட்டு இசையே நம் செவிக்கு உணவாக இருப் பதையும் உணர்ந்தேன். ஆகா! அந்தக் கூத்தாடிகள் குதித்துக் கொண்டிருந்த இடத்தில்தான் என்ன கூட்டம், என்ன கூட்டம்!

இப்படி நான் சிந்தனையில் ஈடுபட்டிருக்கும் பொழுதே, அருகில் இருந்த ஒருவர், "சபாஷ், சேட்! சபாஷ்! நல்ல காரியம் செய்தீர்கள்! நாற்பதாங் கட்டளை

யிலிருந்து கூத்தாடிகளைத் தருவித்தீர்களே! உங்களது அறிவுத்திறனை எத்தனை புகழ்ந்தாலும் தகும்! அடிக்கடி இப்படிக் கல்யாணம் செய்துகொண்டு ஆனந்தமாக வாழுங்கள் !'' என்று வாழ்த்தினுர்.

ஸேட்ஜியின் வீட்டுக்கு எதிர்த்தாற்போலிருந்தது ஒரு திறந்த வெளி. கங்கை யமுனைக் கலப்பெனத் தோற்றம் அளிக்கும் சாக்கடை அங்குதான் பாய்ந்து கொண்டிருந்தது! சுத்தமான காற்றையும் அசுத்தமான தாக்கித் துர்நாற்றத்தை அள்ளி வீசிக்கொண்டிருந்தது. அதன் அருகிலே அந்தக் கர்ணுமிர்தமான சங்கீதத்தைக் கேட்டவாறு நாங்கள் அமர்ந்தோம்.

ஸேட்ஜி ஏதோ திருமணச் சடங்குக்காக வைதிக காரியங்களிலே ஈடுபட்டிருந்தார் என்று தோன்றியது. ஏனென்ருல் அடிக்கொருதரம் அந்தணர்கள் ' ஹா, ஹா, ஹா, ஹா ' என்று ஏதோ மந்திரத்தை முழக்கிக் கொண்டிருந்தார்கள். தர்ம சாஸ்திரப்படி ஸேட்ஜி விவாகம் செய்துகொள்வதற்கு அருகதை உள்ளவராகிக் கொண்டிருந்தார். அவருக்கு அந்த அருகதை ஏற ஏற, அந்தணர்களின் இடுப்பிலேயும் தக்ஷிணைத் தொகை ஏறிக்கொண்டிருந்தது. அருகில் இருந்த மற்றவர்கள் எழுந்து வெளியே வந்தார்கள். மாப்பிள்ளை அழைப்புக்கான குதிரையை அருகில் கொண்டு வந்து நிறுத்திக் கொண்டார்கள்.

அந்தக் குதிரையைப் பார்த்த பின், வெகு பிரயாசைப்பட்டு, சல்லடை போட்டுச் சலித்து அந்தக் குதிரையைத் தேடிக்கொண்டு வந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. அலெக்சாந்தரின் திறம் மிக்க

குதிரை பியூஸே பேலஸ, நெப்போலியனின் உலகப் புகழ் வாய்ந்த குதிரை ஆகியவற்றையெல்லாம், இந்தக் குதிரையின் கால்களில் கட்டித்தான் அடிக்க வேண்டும். இதைப் பார்த்தபின் அவையெல்லாம் வெட்கிச் சாக வேண்டியதுதான். டான் க்விக்ஸோட்டின் ராணுவக் குதிரையைக் காட்டிலும், உயர் சாதிக் குதிரையாக இருந்தது அது. இந்தக் குதிரையினிடம் இன்னொரு முக்கியமான விசேஷம் என்னவென்ருல், ‘கண்ணே கண், ஒன்றே ஒன்று’ என்று அதற்கு ஒரே ஒரு கண்தான் இருந்தது. வயது அதிகமாகி விட்ட தால், சவாரி போகாமலேயே அதன் வாயிலிருந்து நுரை கக்கியது. அதற்குச் சலங்கைக் கட்டிச் சேணம் கட்டிப் பிரமாதமாக அலங்கரித்திருந்தார்கள். என்ன அலங்காரம் செய்து என்ன? பார்ப்பதற்கு இப்பொழுதோ, இன்னும் சற்று நேரத்திலோ என்று சொல்லும்படியான நிலையில்தான் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு நின்றது. அது நின்ற முறையி லிருந்து, ஈக்கள் மொய்த்து அதைத் தொந்தரவு செய்து கொண்டிருக்கின்றன என்பதும் தெரிந்தது. இருந்தாலும், அது சாமல்ஷாவின் சுமையைச் சுமப் பதற்காக அமைதி, உறுதி, தைரியம் புடைசூழ நின் றது ; ஒளியிழந்த கண்ணோடு ஒளியிழக்காத கண்ணை யும் மூடித் தன் உள்ளத்துக்கு ஒரு உறுதியை வருவித் துக்கொள்ள முயன்று கொண்டு நின்றது.

ஸேட்ஜி வந்தார். வாயிலே வெற்றிலை பீடா; கண் களிலே மையின் கரிய பெரிய கோடு; தலையிலே ஜரிகைத் தலைப்பாகை! மாணவர்களுக்குப் பூகோள

பாடத்துக்குத் திருஷ்டாந்தமாக காட்டக்கூடிய வடிவத்தில் கருநிறத்திருமேனி. கையிலே தேங்காய். ஆகா! ஆகா! என்ன அழகு! என்ன அழகு! மேல் நாட்டவர்களை அழைத்து வந்து 'பாருங்கள்! உங்கள் நாட்டிலே இத்தகைய கலைச்சிறப்பை, காலம் எல்லாம் காத்துக் கிடந்தாலும் காணமுடியுமா? என்னதான் சொல்லுங்கள், நாங்கள் மேலோர் மேலோர்தான்!' என்று கூறவேண்டும் என்று என் உள்ளம் துடியாகத் துடித்துக் கொண்டிருந்தது.

ஸேட்ஜி வாசல் திண்ணைக்கு வந்து அதன் ஓரத்தில் நின்று கொண்டார். குதிரை அவர் அருகில் கொண்டு வரப்பட்டது. குதிரைக்கு என்ன தோன்றிற்றோ, தெரியாது. ஸேட்ஜியைப் பார்த்ததும் காளி தேவியின் நினைவு வந்ததா? அல்லது ஸேட்ஜியின் திருமணம், விவாகம் என்னும் சீரிய நோக்கத்துக்கு எதிரான செயல் என்ற எண்ணம் ஏற்பட்டதா? அதனால் அதன் மனத்திலும், அவருக்கெதிராகச் சதி செய்யும் சீர்திருத்த மனப்பான்மைதான் குடிபுகுந்ததா? அல்லது அது துறவறத்தை மேற்கொண்டு அநுபவப்பட்டதனால், அந்த நினைவு வந்து ஸேட்ஜிக்கும் துறவறம் தான் உகந்தது என்ற எண்ணம் ஏற்பட்டதா?

குதிரையின் மனத்தில் உள்ளதை நாம் என்ன கண்டோம்? ஸேட்ஜி உயரமான திண்ணையின் முகப்பில் நின்றுகொண்டு காலைத்தூக்கிக் குதிரையின் முதுகில் வைக்கப் போனதுதான் தாமதம், குதிரை ஹுங்காரம் செய்து கனைத்துக் கழுத்தை அசைக்கவும், கண்களைக் கொட்டவும் தொடங்கியது.

ஸேட்ஜி கல்யாண காலங்களில் மட்டுமே சிறிது நேரத்துக்குக் குதிரையின்மேல் ஏறி உட்காரும் பழக்கத்தைப் பெற்றிருந்தார். அதனால் குதிரையின் இந்த அபிநயத்தைக் கண்டதும், பயந்து நடுநடுங்கிப் போய்ப் பரபரவென்று தமது தூக்கிய திருவடிகளைப் பின்னுக்கு வாங்கிக் கொண்டு விட்டார்.

குதிரையைத் தட்டிக்கொட்டிச் சமாதானப்படுத்தி அவர் அநேகமுறை அதன்மேல் ஏற முயன்றார். ஆனால் அது தன் பிடிவாதத்தை விடவில்லை. கடைசியில் குதிரையைச் சமாளிப்பதற்காக இரண்டு பேர் முன்னால் வந்து நின்றார்கள், இரண்டு பேர் பின்னால் நின்று கொண்டார்கள். பிறகு ஸேட்ஜியைப் பார்த்து, "வாருங்கள், ஸேட்ஜி! இனி கவலையில்லை. ஏறிஉட்காருங்கள் !" என்று தைரியமும் ஊட்டினர்.

வந்திருந்தவர்கள் எல்லோரும் இமைகொட்டாமல் வைத்த கண் வாங்காமல் ஸேட்ஜியையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். துருபதராஜனின் அவையிலே அர்ஜுனன் மீனைக் குறிவைத்து வீழ்த்தினனே, அப்பொழுது அங்கே விஜயம் செய்திருந்தவர்கள் கூட, இப்படி ஒருமைப்பட்ட பார்வையைச் செலுத்தியிருக்க மாட்டார்கள். உண்மையைக் கேட்கப் போனால் ஸேட்ஜி குதிரை ஏறும் காட்சியைக் காணக் கூடியிருந்தோருக்கு அத்தனை ஆவல்.

"கவலைப்படாதீர்கள், உட்காருங்கள் !" என்று பலர் ஆறுதல் மொழி கூறவே, ஸேட்ஜி மறுபடியும் ஓடிப்போயிருந்த துணிச்சலை எல்லாம் ஒருங்கே திரட்டிக்கொண்டார். அவர் கையில் தேங்காய் இருந்தது.

அதுவும் என்ன தேங்காய்? அவருக்குக் கல்யாணத்தைச் செய்துவைக்கப் போகும் தேங்காய்! ஒருமுறை அதன்மீது பார்வை விழுந்ததோ இல்லையோ, அவரது உற்சாகம் இன்னும் பன்மடங்கு பெருகியது. முன்னைக் காட்டிலும் உயரமாகக் கால்களைத் தூக்கிக் கிழட்டுக் குதிரையின் முதுகிலே காலை வைத்தார். எத்தனை தான் கட்டுக்காவலும், ஆறுதல் மொழியும் ஒத்தாசைக்கு இருந்து என்ன? குதிரை குதிரைதானே? அதன் சுபாவம் போகுமா? அதோடு எத்தனை நாள் உலக அநுபவப்பட்ட குதிரை அது! அதற்கு ஆகியிருந்த வயது கொஞ்சமா, நஞ்சமா? அது திடீரென்று முகத்தைத் திருப்பி ஸேட்ஜியைப் பார்த்துக் காதுகளை நிமிர்த்தி ஒரு கனைப்புக் கனைத்தது. அவ்வளவுதான். ஸேட்ஜி நடுநடுங்கிப் போய்விட்டார். அவரது உயிர் அண்ட சராசரங்களையெல்லாம் தாண்டி எங்கேயோ போய்விட்டாற்போலத் தோன்றியது. அந்தப் பரபரப்பில் ஸேட்ஜி தூக்கிய திருவடியை மீண்டும் பின்னால் இழுத்துக் கொண்டார். திடீரென்று அப்படிச் செய்ய நேர்ந்ததனால் அவர் கையிலிருந்த தேங்காய் நழுவிக் கீழே விழுந்துவிட்டது. தலைப்பாகையும் திண்ணைத் தூணில் இடிபட்டதனால் ஒருபுறம் போய் விழுந்தது.

மணமகன் அணிந்துகொண்டிருந்த மணிமகுடம் இப்படி அபசகுனம் போல் கீழே விழுந்துவிடவே' மக்களிடையே ஒரு குழப்பம் பரவியது. அதன் நடுவிலே சிலர் 'கடகட' வென்று சிரிக்க வேறு செய்தனர். ஸேட்ஜி முதலில் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தார். பிறகு பரிதாபமாக மக்களின் முகத்தைப் பார்த்தார். அடுத்தபடியாகச் சுட்டு எரித்து விடுபவர்போலக்

குதிரையைப் பார்த்தார். எல்லாவற்றுக்கும் கடைசியாக உருண்டோடிச் சகதியிலே விழுந்து கிடந்த தம் தலைப்பாகையைப் பார்த்தார். இதையெல்லாம் பார்த்த அவருக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. வானவெளியை நோக்கி ஆண்டவனை நிந்தனை செய்வது போல் ஏதோ முணுமுணுத்தார். அவருக்கு அங்கே என்ன தென்பட்டதோ, ஒரேயடியாக உதட்டைக் கடித்துக் கொண்டு கூட்டத்தை ஒரு கண்ணோட்டம் விட்டார். "ஆங், ஆங், ஆங்" என்று எல்லோருடைய காதிலும் படும்படியாக உரக்கக் கூவினார்.

எல்லோரும் ஒருமுறை வாய் அடைத்துப்போய் வியப்பே உருவாகி விட்டனர். எத்தனையோ பேர் வாயைக் கைக்குட்டையால் அடைத்துக் கொண்டு வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டனர். ஸேட்ஜி வெட்கப்படுவதுபோல் எனக்குப் பட்டது. ஸேட்ஜியின் வாயிலிருந்து வெளிவந்த அந்த ஒலிக்கு மக்களால் சரியான பொருள் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஸேட்ஜி அழுவதுபோன்ற குரலில், தம் குல தெய்வத்தை வேண்டிக் கொண்டார். பிறகு தட்டித் துடைத்துத் தலைப்பாகையை அவர் தலையில் எடுத்து வைத்தார்கள். ஆறுதல் மொழி கூறி அவரைத் தேற்றினார்கள். வலிமை மிகுந்த நான்கு ஆசாமிகள் அவரை அலக்காகத் தூக்கிக் குதிரையின் முதுகில் உட்கார வைத்தார்கள். அப்பொழுது குதிரைக்குத் துவேஷ உணர்ச்சி ஏற்பட்டு விட்டதுபோலத் தோன்றியது எனக்கு. இல்லாவிட்டால் அதன் கண்கள் அப்படிப் பளிச்சிடுவானேன் ? ஆனால் அதை அந்த வேளையில்

யாரிடமாவது சொன்னால் என்னைப் பைத்தியக்காரன் என்றே எண்ணுவார்கள்; பரிகாசம் பண்ணுவார்கள்.

ஸேட்ஜி குதிரை மேல் சவாரி செய்தவாறே கையில் ஒரு வாளை ஏந்திக் கொண்டார். தேங்காய் தவறி விழுந்து விடக் கூடாதே என்ற கவலை ஒரு புறம். வாள் நழுவி உறைக்கு வெளியே வந்து விடக்கூடாதே என்ற பயம் இன்னொரு புறம். இப்படியாகத் தானே ஸேட்ஜியின் கல்யாண ஊர்வலம் தொடங்கியது. பாண்டு முழக்கமும், கூத்தாடிகளின் கோமாளிக் கூத்துமாக ஜே ஜே என்று இருந்தது ஊர்வலத்தில்.

கடைசியில் ஊர்வலம் பெண் வீட்டை நெருங்கியது. பெண்ணின் வீடு கொஞ்சம் தாழ்வான பிரதேசத்தில் இருந்தது. எனவே, கொஞ்சம் சரிவாக இறங்கிப் போகவேண்டி யிருந்தது. வாத்தியக்காரர்கள் வாத்தியம் வாசிப்பதிலும் கூத்தாடிகள் ஆடிக் களிப்பதிலும் ஈடுபட்டிருந்தனர். சரிவான பாதையைக் கண்டதும் ஸேட்ஜி அமர்ந்திருந்த குதிரை மலைப் பிரதேசத்தில் அப்ஸர மாது நிற்பது போன்ற பாணியில் ஸ்தம்பித்து நின்று விட்டது. முன்னே அடி எடுத்து வைக்க அது மறுத்தது. அதற்காக அது கிளர்ச்சியே செய்யக் கூடத் தயாராகிவிட்டது. இந்தச் சீர்திருத்தக் காலத்தின் பிரபாவம் அந்தக் குதிரையையும் ஆட்கொண்டிருப்பதாகவே தோன்றியது.

இரண்டு மூன்றுபேர் ஓடோடி முன்னால் வந்தார்கள். அதன் கடிவாளத்தைப் பிடித்து முன்னால் இழுக்கலானார்கள். ஆனால் குதிரையோ தீர்மானமாக நகருவதில்லை என்ற முடிவுக்கு ஏற்கெனவே வந்து

விட்டது. அதிலிருந்து இம்மியளவும் அது பிறழ விரும்ப வில்லை. ஸேட்ஜி தாம் இறங்கி விடுவதாகக் கூறினார். ஆனால் ஜனங்கள் அதற்கு இடங்கொடுக்கவில்லை. " கல்யாண மாப்பிள்ளை இப்படிப் பாதிவழியில் இறங்கு வதாவது? கூடாது, கூடாது! கூடவே கூடாது" என்று தடுத்து விட்டார்கள். இரண்டு மூன்றுபேர் குதிரை யின் முன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டனர். பின்னாலிருந்து ஒருவன் 'சுரீர் சுரீர்' என்று அதன் பின்னங்கால்களைப் பார்த்துச் சவுக்கினால் நான்கைந்து அடி கொடுத்தான்.

குதிரை தன் துணிச்சலை விட்டது; தனது புரட்சி மனப்பான்மையையும் மூட்டைகட்டி வைத்தது. அடி மேல் அடிவிழவே, அதன் வலி பொறுக்கமாட்டாமல் நடக்கச் சம்மதித்தது. அது இரண்டு மூன்று அடி எடுத்து வைப்பதற்குள்ளாகவே ஸேட்ஜி பதற்ற முற்றார். சரி வின் காரணமாகக் குதிரையின் சேணம் முன்பக்கம் சாய்ந்தது. அதோடு அவரும் முன்னுக்குச் சாய்ந்தார். குதிரையின் முன்னங்கால்கள் நடுங்கின. ஸேட்ஜியும் தம் பிடிப்பைவிட்டு மேலும் முன்னுக்குச் சாய்ந்துவிட் டார். அப்புறம் என்ன? சுமை தாங்கமாட்டாமல் குதிரையின் கால்கள் வழுக்கிவிட்டன. அடுத்தகணம் ஸேட்ஜியின் கனத்த சரீரமும் திடுதிப்பென்று 'பொத கடீர்' என்ற சப்தத்துடன் பூமியில் விழுந்தது.

கூடியிருந்த ரசிகப் பெருமக்கள் அத்தனைபேரும அந்தக் காட்சியைக் கண்டு ரசித்தனர். ஆனால் யாரும் ஒத்தாசைக்காக ஓடவில்லை. காரணம், இத்தகைய காட்சி மீண்டும் மீண்டும் காணக் கிடைக்காது என்பது

தான். அந்தக் காட்சியைக் கண்ணுறக் கண்டபின் அவர்கள் ஸேட்ஜியைத் தூக்கிக் கைப்பிடியாக அழைத்து வந்தார்கள். கல்யாண வீடு அதிகத் தொலை வில் இல்லாததால் அதிகச் சிரமமின்றியே அவர்கள் அந்த வீட்டு வாசலை அடைந்தார்கள்.

மணமகன் பெண்வீட்டு வாசலை அடைந்ததும், வாசலில் செய்யும் சம்பிரதாயச் சடங்குகள் பூர்த்தியா யின. அப்புறம் பக்கத்தில் போட்டிருந்த ஊஞ்சலில் ஸேட்ஜீ மாப்பிள்ளைபோல் ஜம்மென்று உட்கார்ந்தார். சிறு பொம்மை போன்ற ஒரு சிறுமியை அவரது மாமா ஊஞ்சலுக்குக் கொண்டுவந்து உட்காரவைத்தார். ஊஞ் சல் பாட்டுகள் ஒருபுறம். மந்திரோச்சாடனம் ஒருபுறம். அமோகமாக நடைபெற்றன. சற்றுத் தூரத்தில், அதா வது நான் நின்றுகொண்டிருந்த இடத்தில் சமர்த்த ஜோஷி ஒரு உழக்கில் தண்ணீரை வைத்துக்கொண்டு என்னவோ செய்து கொண்டிருந்தார். விசாரித்ததில் அவர் முகூர்த்த நேரத்தைக் கணக்கிட்டுக் கொண் டிருப்பதாகச் சொன்னார்கள். அவரது வாய் என்ன என்னவெல்லாமோ சுலோகங்களை உச்சரித்துக் கொண்டிருந்தது. அதே நேரத்தில் அவர் ஸேட்ஜிக்கு விடுத்துக் கொண்டிருந்த எச்சரிக்கைகளுக்கும் ஒரு கணக்கு வழக்கு இல்லை.

அப்பொழுது நான் ஜோஸியரின் நிலையிலே ஒரு விசேஷத்தைக் கண்டேன். அவருடைய கண்களிலே ஒரு கிறக்கம் ; நாவிலே ஒரு தடுமாற்றம் ; பேச்சிலே ஒரு படபடப்பு ஆகியவை காட்சி அளித்தன. எனக்கு என்னமோ ஜோஸியர் 'விஜயா' என்று புகழ் பெற்ற

லாகிரிதேவியைப் பரிபூரணமாக உபாசித்திருக்க வேண்டும் என்று தோன்றியது. ஐயாவைச் சந்தோஷப் படுத்த வேண்டும் என்றால் அம்மாவைக் கையில் போட்டுக்கொண்டு சந்தோஷப்படுத்துவது தானே மரபு? அந்த மரபை அநுசரித்துச் சிவனைச் சந்தோஷப் படுத்துவதற்காக, மங்களமயமான அந்த நேரத்திலே அவர் "பங்க பவானி"யைச் சேவித்திருந்தார். அந்த மயக்கத்தில்தான் அப்படித் தடுமாறித் தடுமாறிச் சுலோகத்தை உச்சரித்துக் கொண்டிருந்தார். அந்த மயக்க நிலையிலே அவர் முகூர்த்தத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தது அவ்வளவும் கற்பனை; தவறு. திரும்பத் திரும்ப ஒரே எண்ணை எத்தனை தடவை சொல்லியிருப்பார், தெரியுமா? அதோடு அவர் எங்கும் சரியான முகூர்த்தத்தைக் குறித்தும் வைத்துக்கொள்ளவில்லை. கடைசியில் ஜோஸியர் தட்டை எடுத்துத் தட்டினார். எல்லா வாத்தியங்களும் ஏககாலத்தில் ஊளையிட்டன. கல்யாணம் முடிந்தது; சாமல் ஷா மனையாளைப் பெற்றார். அவர் ஆசையும் நிறைவேறியது.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் கூட்டம் சிறிது கலகலத்தது. முன்னேற எனக்கு இடம் கிடைத்தது. நான் திருமண மண்டபத்தை நெருங்கினேன். கல்யாணப்பெண் தூங்கிப்போயிருந்தாள். அவள் தாயார் அவளை மடியில் வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அதற்குப் பிறகுதான் ஸப்தபதி, அம்மி மிதித்தல் முதலிய சடங்குகள் நிகழவிருந்தன. அதன் பெருமையில்தானே நமது நாட்டு விவாக மண்டபத்துத் தூண்கள் உறுதியாக நிறுத்தப்பட்டிருக்கின்றன?

இந்தத் தார்மிக ஆசை என் மனத்தை நிறைத்து என்னையும் புனிதமாக்கியது. எனக்கு எட்டாவது வயதிலே கல்யாணமாகிவிட்டது. எனது மனைவி இன்றும் அப்படியே கல்மாதிரி உயிரோடு இருக்கிருள். கல்யாண காலத்தில் என் ஆசை என்னவாக இருந்தது என்பது எனக்கு இப்பொழுது நினைவில்லை. இன்றுதான் அதன் பெருமையை உணருகிறேன். அடாடா! அப்படி ஒரு ஆசையை உண்டுபண்ணிக் கொண்டு பேணி வளர்க்காமல் நல்ல தருணத்தை நழுவவிட்டு விட்டோமே என்றும் வருந்துகிறேன்.

பலகையிலே ஒரு கையை ஊன்றி ஸேட்ஜி அந்தக் குழந்தையின் கரத்தைப் பற்றியவாறே எழுந்தார். எத்தனையோ முயன்றும் பெண் கண் விழிக்கவில்லை. கடைசியில் சிறுமியின் தாயாரே எழுந்து குழந்தையைத் தோளில் சாத்திக்கொண்டு, ஸேட்ஜியுடன் விவாக வேதியைப் பிரதக்ஷிணம் வந்தாள். இப்படியாகக் கடைசியில் புனிதத்துவம் வாய்ந்த சப்தபதிச் சடங்கும் முடிந்தது.

எழுதுவதற்கு இன்னும் எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. ஆனல் இடம்தான் இல்லை. நான் வெளியே வந்தேன். வேடுவப் பெண்டிர்கள் குடிமயக்கத்தில் ஒருவரை யொருவர் திட்டிக் கொள்வார்களே, அதுபோல் பெண்டிர்கள் பாடிக்கொண் டிருந்தார்கள். நடை, உடை, பாவனையிலே நாகரிகம் இல்லை; பேச்சிலே ஒரு பவ்யம் இல்லை. சொல்லுக்கு ஒரு சிறப்பு இல்லை. சம்பந்தி ஏசல் என்று ஆரம்பித்த அவாகளது சொற்களிலே என்ன என்னவெல்லாமோ அசிங்கமான ஆபாசச் சொற்கள் புகுந்து புறப்பட்டன.

இதையெல்லாம் காண வேண்டும் என்ற ஆசை எனக்கு அறவே அடங்கி ஒடுங்கிவிட்டது. எனவே, நான் தங்கியிருந்த விடுதிக்கு வந்தேன்.

இரவு வண்டி புறப்படும் நேரமாகிவிடவே, நான் காண்டா பாயியைப் பார்த்து, "இனி நான் வருகிறேன்!" என்று விடைபெற்றேன்.

"அது சரி, ரண் சோட்! ஸேட்ஜியிடம் சொல்லிக் கொண்டு போங்கள். அவரைப் பார்க்காமல் போனால் நன்றாயிராது. அப்புறம் அவர் என்னைக் கோபித்து கொள்வார்!" என்றார் காண்டா பாயி.

"சரி!" என்று சொல்லிவிட்டுப் பெண் வீட்டை அடைந்தேன். ஸேட்டைப்பற்றி விசாரித்ததில், அவர் அன்னையின் அறையில் 'மணமகன்—மணமகள்' பூஜையில் ஈடுபட்டிருப்பதாகக் கூறினார்கள். ஜனங்கள் சாப்பாட்டு விஷயத்தில் மும்முரமாக இருந்ததால், வீடே வெறிச்சோடிக்கிடந்தது. நான் எனக்கு அடையாளம் காட்டப்பட்ட அறைப்பக்கம் ஸேட்ஜியைப் பார்ப்பதற்காகச் சென்றேன்.

சுவரிலே வர்ணம் தீட்டி அன்னையின் உருவம் வரையப்பட்டிருந்தது. பூஜை என்ன? உபாத்தியாயரின் பையை நிரப்புவதுதானே? அரிசியும் கோதுமையும் குவித்துவைக்கப்பட்டிருந்தன.

எதிரே ஸேட்ஜியும் புதுப்பெண்ணும் உட்கார்ந்திருந்தார்கள். புதுமணப்பெண் இப்பொழுது தூங்கி விழித்துக் கொண்டிருந்தாள். தன் கணவரின் அருகில் அமர்ந்திருந்தாள். குருக்கள் ஏதோ எடுத்து வருவதற்

காக வெளியே சென்றிருந்தார். நான் அறைக்குள் நுழைந்தவன் 'திடீர் பிரேக்' போட்டாற்போல் சட்டென்று நின்றேன். ஸேட்ஜி காதல் நாடகம் நடத்திக் கொண்டிருந்தார். ஆறு வயது கூட நிரம்பாத அறியாப் பெண்ணுடைய புர்க்காத் தலைப்பைப் பற்றி இழுத்துக் கொண்டிருந்தார். பெண் அந்த வேடிக்கையைக் கண்டு 'கலகல' வென்று சிரித்துக்கொண்டிருந்தாள். நான் பார்த்துக்கொண்டு நின்றேன். நம் நாட்டிலே காதல் கனி மொழிகளுக்கு இடமே இல்லை என்று யார் சொல்கிறது! இந்தக் காட்சியை—காதல் காட்சியைப் பார்த்த பின்னரும் ஒருவனுக்கு அப்படிச் சொல்ல மனம் எப்படித்தான் துணியும் ?

நான் சித்திரப் பதுமையாக நின்று அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஸேட்ஜி திரையிட்டு முகமலர் மறைத்து வைத்திருந்த அந்தச் சிறுமியின் புர்க்காத் தலைப்பை அகற்றித் தமது காதல் கடைக் கண் வீச்சினாலே சொடுக்கிக் கவர முயன்றார். அவர் அந்தப் பெண்ணுடன் மேலும் கொஞ்சி விளையாடத் தொடங்கினர். 'மாட்டேன்' என்று கூறிப் பெண் நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள். ஸேட்ஜி மறுபடியும் அவள் அருகில் சென்றார். சிறுமி அதட்டும் குரலில், "அப்புறம் அம்மாவைக் கூப்பிடுவேன்!" என்று பய முறுத்தினள். அதையும் காதில் வாங்கிக் கொள்ளாமல், தம் முயற்சியிலும் தோல்வி காண விரும்பாமல், "உட்காரேன்!" என்று கூறி ஸேட் அவள் கன்னத்தைத் தடவினர். ஸேட்டின் கரம் பற்றிய சுகுமாரி—அறியாச் சிறுமி உரத்த குரலில் கூச்சலிட்டாள் :

"ஓ அம்மா! பாரேன், இந்தக் கிழம் என்னை அடிக்க வருகிறது!"

என்ன சொல்வேன், போங்கள்! நான்—ரண சோட் என்ற பெயருள்ள நான், உண்மையாகவே அந்த யுத்தகளத்தைவிட்டு ஓடினேன். ஓடும்பொழுது பெண்கள் பாடிக்கொண்டிருக்கும் குரல் அந்தக் கல்யாணச் சந்தடியிலும் என் காதுகளில் விழுந்தது:

மாப்பிள்ளையாம், மாப்பிள்ளை!
மண்ணுங்கட்டி மாப்பிள்ளை!
கண்ணுலமாவது கண்ணுலம்!
கண்ணராவிக் கண்ணுலம்!
ஏமாந்தியா, நல்லா ஏமாந்தியா!
எங்க பொண்ணுக்கிட்ட ஏமாந்தியா!








